## பொருளடக்கம்



திரு. S. சோமசுந்தரபாரதி யவர்கள், M.A., B.L.,

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்

தமிழ்ப் பேராசிரியர்.




சிலம்பு-கடு]  ஈசுவர—சித்திரை  [பரல்-கூ

## திருநாவுக்கரசு அடிகள் தேவாரம்

### திருக்கழிப்பாலைத் திருத்தாண்டகம்

செற்றதோர் மனமொழிந்து சிந்தை செய்து
சிவமூர்த்தி யென்றெழுவார் சிந்தை யுள்ளால்
உற்றதோர் நோய்களைந் திவ்வுலக மெல்லாங்
காட்டுவா னுத்தமன்றா னோதா தெல்லாங்
கற்றதோர் நூலினன் களிறு செற்றான்
கழிப்பாலை மேய கபா லப்பனார்
மற்றிதோர் மாயக் குரம்பை நீங்க
வழிவைத்தார்க் கவ்வழியே போது நாமே.

பதவுரை:—

தான் ஓதாது எல்லாம் கற்றதோர் நூலினன்—அநாதிமல முத்தனாதலின் தான் எந்த நூல்களையு மோதாது இயல்பாகவே எல்லாம் அறிகின்ற பேரறிவுடையவனும்

களிறு செற்றான்—யான் என்ற அகப்பற்றும், எனது என்ற புறப் பற்றுமாகிய செருக்கு முற்றிலும் இல்லாதவனும்

கழிப்பாலை மேய கபாலப்பனார்—திருக்கழிப்பாலை என்ற தலத்தில் திருக்கோயில் கொண்டருளியும் பிரமகபாலத்தைக் கையில் ஏந்தியும் எல்லா உயிர்களுக்கும் தந்தையாகியு மிருக்கின்ற சிவபெருமான்

செற்றது ஓர் மனம் ஒழிந்து—தாங்கள் முன் உலக நுகர்வுகளை வெறுத்த செயலை ஆராய்ந்து அறிகின்ற மனத்தை முற்றிலும் கெடுத்து (அதாவது வெறுத்தோம் என்னும் வாசனையுமின்றி முற்றிலும் அமைதியுள்ள மனத்தை உடையவராயும்)

சிந்தை செய்து—சிவபெருமானுடைய திருவடிகளையே எப்பொழுதும் மெய்யன்புடன் நினைந்துகொண்டிருந்தும்

சிவமூர்த்தி என்று எழுவார் சிந்தையுள்—இன்ப உருவனே என்று நிட்டை செய்தும் அவனுடைய திருவடிகளை அடைந்து வீட்டின்பம் பெற முயலுதற்கு முனைந்து எழுகின்ற அடியார்களுடைய சிந்தையினுள்ளே

உற்றது ஓர் நோய்களைந்து—முறையே, அச்சிந்தையைப் பற்றியிருக்கின்றதாகிய ஒப்பற்ற ஆணவமலத்தையும் (அதற்குத் துணைகளாயுள்ள வினை மாயை மலங்களையும்) அறவே ஒழித்து (தன்னை மெய்யறிவா லறியும்படி காட்டி அறிவித்தும்)

இவ்வுலக மெல்லாம் காட்டுவான்—(அவர்கள் முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்து கேவல நிலையிலே புகாதும், தங்களிடம் அருள் ஞானம் விளங்கியபொழுது அந்த ஞானம் தங்களுடைய ஆன்மாவின் விளக்கம் என்று தன்முனைப்புக் கொள்ளாமலும், அங்ஙனம் விளங்கின அருள்ஞானத்தில் அடங்கி நிற்கும்பொழுது அவ்வருள்ஞானத்தில் சிவமாகிய முதல் அவர்களுடைய அகக் கண்ணுக்கு வெளிப்படுத்) தான் உலகிலுள்ள எல்லா உயிரில் பொருள்களிலும் உயிர்ப்பொருள்களிலும் அத்துவிதமாய்க் கலந்து நின்று உயிர்கள் பொருட்டு அநுக்கிரகம் செய்து வருதலை அவ்வடியார்களோ டத்துவிதமாய்க் கலந்து நின்று கண்டு அவர்களைக் காணும்படி செய்வானாகியும்

உத்தமன்—அவ்வடியார்களிடம் தனது அருட்குணங்களைப் பதிவித்து அவர்களோடு உடனாய் நின்று அவர்கள் நுகரப்பெறும சிவ போகத்தைத் தானும் அறிந்து நுகர்தல் காரணமாக அவர்கள் தனது சிவபோகத்தை அழுந்தி அறிந்து நுகரும்படி செய்கின்ற உத்தமனுமிருக்கின்றான்

இது—மேலே கூறுகிறபடி செற்றதோர் மனம் ஒழிதல், சிந்தை செய்தல், சிவமூர்த்தி என்றெழுதல் ஆகிய இந்தத் தவத்தை

ஓர் மாயக்குரம்பை நீங்க வழி வைத்தார்—(திருக்கழிப்பாலையில் வீற்றிருக்கின்ற சிவபெருமான்) அடியார்களாகிய நாம் ஒப்பற்ற வஞ்சனை நிறைந்துள்ள உடலினது தன்மையினின்று நீங்கித் தன்னை அடைந்து உய்யும் வழியாக அமைத்துள்ளான்

அவ்வழியே நாம் போதும்—அங்ஙனம் அவன் அமைத்த அந்த வழியிலேயே அடியாராகிய நாம் சென்று இன்பப் பேறு அடைவோமாக.

விளக்க உரை:—

*தான் ஓதாது எல்லாம் கற்றதோர் நூலினன்*—சிவபெருமான் எவ்வகை அறிவுக்கும் முதலாயுள்ளவன்; அவன் அறிகிற அறிவுக்கு ஒரு முதலுமில்லை. திருவள்ளுவர், அவனை 'வால்அறிவன்' என்றார். 'ஓதாதே வேதமுணர்ந்தாய் போற்றி'' (269—11) என்று திருநாவுக்கரசு அடிகள் கூறுதல் காண்க.

*களிறு செற்றான்*—களிறு என்பது யானை. அது இங்கே உருவகமாய் யான் எனது என்னும் செருக்கைக் குறிக்கிறது—''இருகை யானையை யொத்திருந் தென்னுள்ளக் கருவையான் கண்டிலேன்'' என்று **மாணிக்கவாசக அடிகள்** கூறியதும் இப்பொருள் பற்றியாகும்.

செறுதல் என்பது அழித்தல். மலரகிதனாகிய சிவபெருமானுக்கு யான் எனது என்னும் செருக்கு இயல்பாகவே இல்லாதிருப்பினும் அவனைச் செருக்கை அழித்தவன் என்று இங்கே அடிகள் கூறியது மலசகிதமாயுள்ள மக்களுடன் ஒப்பிட்டுநோக்கி என்க. அடிகள் திருவீழிமிழலைத் திருத்தாண்டகம் ௩-வது பாட்டில் 'நேரிழையைக் கலந்திருந்தே புலன்களைந்தும் வென்றானை' என்று கூறியதும் இக்கருத்துப்பற்றியாகும். ''பொறிவாயிலைந்தவித்தான்'' என்று கடவுளைத் **திருவள்ளுவர்** கூறியதையும் நோக்குக.

*கழிப்பாலை மேய கபாலப்பனார்*—மேவிய என்பது மேய என இடைக்குறைந்து நின்றது. 'கபாலம்' என்பது நான்முகனது தலையினோடு. அச்சொல்லில் 'அம்' குறைந்து 'கபால்' என நின்று 'கபால்' என்பதனோடு 'அப்பனார்' சேர்ந்து கபாலப்பனார் என நின்றது. சிவபெருமான் எல்லா உயிர்களுக்கும் தந்தையாதலின் அப்பனார் என்று கூறப்பட்டான். 'நூலினன்', 'களிறு செற்றான்'; 'கபாலப்பனார்' 'வழிவைத்தார்' எனக் கூறியன ஒருமைப் பன்மை மயக்கம். முன்னைய இரண்டு சொற்களும் சிவபெருமானுடைய ஏகனாகிய சிறப்பு இயல்பையும், பின்னைய இரண்டு சொற்களும் அவனுடைய அநேகனாகிய பொது இயல்பையும் குறித்தலால் அடிகள் அவ்வாறு கூறினார்போலும்.

*செற்றது ஓர் மனம் ஒழிந்து*—செற்றது என்பது இறந்த கால இடைநிலையோடு 'து' விகுதி கூடிய தொழிற்பெயர். செற்றது = வெறுத்தது. வெறுத்தல் = ஐம்பொறிகளால் நுகரப்பெறும் உலக நுகர்வுகளைப் பேய்த்தேர்போல் நிலையில்லாதனவெனக் கண்டு வெறுத்தல். இந்த வெறுப்பு மனதின்கண் நிகழ்தலால் மனம் ஒழிந்து என்றும், முன் செற்ற நுகர்வைப் பின் நினைத்தலால் அதன் வாசனை வந்து மனதைத் தாக்குமாதலின் செற்றது ஓர் மனம் ஒழிந்து என்றும் அடிகள் கூறினர். மனமானது பொய் ஆகிய உலகத்தை மெய் ஆகவும், மெய் ஆகிய சிவத்தைப் பொய் ஆகவும் மாறி எண்ணி, எண்ணில்லாத சங்கற்ப விகற்பங்களைச் செய்தலால் வீடுபேற்றை அவாவும் அடியார்கள் அத்தகைய மனத்தை அதன் வாசனைகூட இல்லாமல் அழித்து அமைதியுடன்

மெய்ப்பொருளாகிய சிவத்தையே நோக்கும் மனமாகச் செய்தல் வேண்டும் என்பார் செற்றதோர் மனம் ஒழிந்து என்ருர். ஒழிதல்-அழித்தல், கெடுத்தல் (The mind is the great slayer of the real.)

மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே என்று தாயுமான அடிகள் கூறியது நோக்குக. இஃது அடியார்களுக்கு ஞானசாரியரிடம் கேட்ட உண்மையைச் சிந்தித்தலால் உண்டாவது. இதன் பயனுக அவர்களுக்கு அருள்மேனியாகிய சிவரூபதரிசனமும் அதனுடன் நிகழும் ஆன்ம தரிசனமு முண்டாகும். ஆன்ம தரிசனம் காரணமாக ஆன்மா, தான் வேறு முப்பத்தாறு தத்துவங்களும் வேறு என்றும், தான் சடப்பொருள்களாகிய தத்துவங்களை அறிகிறவன் என்றும் அறிதலால் அச்சடத்தத்துவங்கள் தன்னுளடங்கி நிற்கக் காண்கின்ருன். இதனுல் ஆன்மாவின் அறிவுநிகழ்ச்சி கூறப்பட்டது.

சிந்தை செய்து—என்பது ஞானசிரியரிடம் உண்மைப் பொருளைக் கேட்டுச் சிந்தித்த அடியார் ஐயம் திரிபுகளறச் சிவமே மெய்ப்பொருளெனச் சிறிதும் கருவி அறிவுக் கலப்பில்லாத மெய்யறிவிஞலே தேறித்தெளிந்து அச்சிவம், தம்பொருட்டு ஒழிவின்றிச் செய்துவரும் அருட்செயல்களை நினைந்து நினைந்து உருகி உருகி அவனிடத்து அன்பு மீதூர்ந்து அவனையே நினைந்து கொண்டிருத்தல். இங்ஙனம் அவர்கள் தெளிந்து சிந்தித்தலின் பயனுக ஆன்ம சுத்தியும் அதனேடு உடன் நிகழும் சிவதரிசனமும் உண்டாகும். மேலே கூறியவண்ணம் ஆன்ம தரிசனத்தின் பயனுக ஆன்மா முப்பத்தாறு தத்துவங்களும் தன்னுளடங்கி நிற்கக் கண்டபின் அறியாமையாகிய கேவல நிலையில் பொருந்தாது நிற்க, அதனிடத்து அருள்ஞானம் விளங்கித்தோன்றும்; அங்ஙனம் விளங்கித்தோன்றும் சுடரொளியை ஆன்மாத் தன்னுடையதென்று அகம்பிரம ஞானங்கொள்ளாது தன்னை விட்டு என்றும் நீங்காத அருட்சத்தியின் சுடரொளி என்றறிந்து அச்சத்தியினுளடங்கித் தற்போதமின்றி நிற்ப அந்த அருள் ஞானச் சுடரொளியில் ஞேயப்பொருளாகிய சிவம் ஆன்மாவின் அகக்கண்ணுக்கு வெளிப்பட்டுத் தோன்றும். இவ்வாறு சிவம் வெளிப்பட்டுத் தோன்றுதலே சிவதரிசனம் என்று கூறப்படும். சிவதரிசனத்தின்பின் ஆன்மாவுக்குச் சிவத்தோடு இரண்டறக் கலந்து நிற்கும் சிவயோகம் உண்டாகிறது. இதனுல் ஆன்மாவின் திருந்திய இச்சையாகிய அன்பு நிகழ்ச்சி கூறப்பட்டது.

சிவமூர்த்தி என்று எழுவார் சிந்தையுள்—சிவம் என்பது இன்பம் என்றும் மூர்த்தி என்பது உருவமுடையவன் என்றும் பொருள்படும். மேலே கூறியவாறு சிவமே மெய்ப்பொருளெனத் தெளிந்து அவனை மெய்யன்புடனுருகிச் சிந்தித்துக்கொண்டிருக்கும் அடியார்கள் அவனே தங்களுக்குப் பேரின்பம் தரவல்ல இன்ப உருவன் என்று உணர்ந்து நிட்டை கூடுதலால் அடிகள் சிவமூர்த்தி என்று எழுவார் சிந்தையுள் என்ருர்.

எழுதல் என்பது சிவப்பேறு அடைதற்கு முனைந்து நிற்றல். ஆல்-அசை. இதனால் ஆன்மாவின் நிட்டையாகிய செயல் நிகழ்ச்சி கூறப்பட்டது. திருந்திய அறிவு அன்பு செயல் ஆகிய மூன்றுமே முறையே காரண காரியங்களாய் நிகழ்ந்து ஆன்மாவுக்குப் பேரின்பந்தருதற்கு ஏதுக்களாயுள்ளன.

உற்றது ஓர் நோய் களைந்து—மேலே கூறுகிறபடி அடியார் செற்ற தோர் மனங் களைந்ததைச் சிவபெருமான் நோக்கி அவர்களுடைய பக்குவத்தை அறிந்து அவர்களுக்கு வேறாய் நின்று அறிவித்து அவர்களை அநாதியே பற்றியுள்ள ஆணவமல வலியை நீக்கு கின்றான் என்பார் உற்றது ஓர் நோய் களைந்து என்றார். ஆணவ மலமானது ஆன்மாவினுடைய அறியாமைக்கும் அதுபற்றி உண்டாகும் எல்லாத் துன்பங்களுக்கும் மூலகாரணமாயிருத்த லால் ஓர் (ஒப்பற்ற) நோய் என்றார். நோய் என்பது பிணி (வியாதி). ஆணவமலம் உயிர்களை நோய்போலப் பிணித்துத் துன்பஞ்செய்தலால் அதனை அடிகள் நோய் என்றார். இனம் பற்றி ஆணவமல நீக்கத்துக்காக இடையே வந்து ஆன்மாவைக் கூடும் வினை மாயை மலங்களும் கொள்ளப்படும். களைந்து என்பது சிறிதும் எஞ்சுதலின்றி முழுவதும் நீக்கி என்று பொருள்படும். இதனால் சிவபெருமானால் அடியார்களுக்கு உண் டாகும் மலநீக்கமும் அதுபற்றிவரும் அறிவு விளக்கமும் கூறப் பட்டன. மேலும் இதனால் சிவபெருமானுக்கும் ஆன்மாவுக்கு முளதாகிய அத்துவித நிலையில் சிவபெருமான் ஆன்மாவுக்கு வேறாய் நின்று அறிவித்துச் செய்யும் காட்டு முதவியும் கூறப் பட்டது.

இவ்வுலகமெல்லாம் காட்டுவான்—மேலே கூறுகிறபடி சிவரூபமாகிய அருள்மேனியையே நினைந்துகொண்டிருக்கும் அடியார்களைச் சிவபெருமான் நோக்கி அவர்களுடைய பக்குவத்தை அறிந்து அவர்களுக்குத் தான் அருளையே திருமேனியாகக்கொண்டு உயிர் கள் பொருட்டு உலகெலாம் நிறைந்து நின்று அருள்செய்து நிற்றலை அவர்களோடு ஒன்றாய்க் கலந்து நின்று கண்டு அவர் களையும் தனது எங்கும் நிறைந்துள்ள வியாபகத்தைக் காணும் படி செய்கின்றான் என்பார் உலகமெல்லாங் காட்டுவான் என் றார். அடியார்கள் தங்களோடு சிவபெருமான் ஒன்றாய்க்கலந்து நின்று கண்டு தங்களையும் காணச்செய்யும் மெய்யன்பால் சிவ பெருமானுடைய வியாபகத்தை அறியாவிட்டால் அவனுடைய அருட்செயலை நினைந்துருகி அவனிடத்தில் அன்புமீதூர்ந்து அவனுடைய வியாபகத்தில் அடிமையா யடங்கிநிற்றல் முடி யாது. இதனால் அறிவு விளக்கத்துக்குப்பின் அடியார்களுக்கு உண்டாகும் அருள்விளக்கம் கூறப்பட்டது. இந்த அறிவு விளக்கத்தினால் துரியநிலையின்கண் ணுளதாகும் பேரின்பப் பிரபை உண்டாகுமே அன்றித் துரியாதீதநிலைக்க ணுளதாகும் பேரின்ப அனுபவ முண்டாகமாட்டாது. மேலும் இதனால் சிவபெருமானுக்கும் ஆன்மாவுக்கு முளதாகிய அத்துவிதநிலை

யில் சிவபெருமான் ஆன்மாவோடொன்றாய்நின்று கண்டு ஆன்மாவையும் காணும்படி செய்கிற காணுமுதவியும் கூறப்பட்டது.

உத்தமன்—மேலே கூறுகிறபடி சிவமூர்த்தி என்று நிட்டைசெய்யும் அடியார்களைச் சிவபெருமான் நோக்கி அவர்களுடைய பக்குவமறிந்து அவர்களிடத்தில் தன் அருட்குணங்களைப் பதியச்செய்து அவர்களோடு உடனாய்த்தங்கி நின்று அறிந்து அவர்களையுந் தனது சிவபோகத்தை அறிந்து நுகரச்செய்யும் உத்தமனாயிருக்கின்றான் என்பார் உத்தமன் என்றார். தனக்கென ஒன்றும் வேண்டாது பிறரையும் தன்போல நோக்கி இன்பமடையச் செய்கின்றவன் உத்தமன் ஆதலின் அடிகள் இங்கே உத்தமன் என்றும், பெயர்க்குறிப்பு ஏதுவினால் சிவபெருமான் அருள் விளக்கம் அடைந்த அடியார்களுக்கு ஆனந்தவிளக்கம் அருள் செய்ததைக் கூறியருளினர். உத்தமன் என்பது உத்தமனாயிருக்கின்றான். இங்கே ஆன்மா சிவபோகம் நுகர்தற்குச் சிவபெருமான் ஆன்மாவோ டுடனாய்நின்று ஆன்மா நுகரப்பெறும் சிவபோகத்தை அறிந்தாலன்றி ஆன்மா சிவபோகம் நுகரமுடியாது என்னும் எச்சமயத்திலுங் கூறப்படாத அரிய சைவசித்தாந்த உண்மை குறிக்கத்தக்கது. இதுபற்றிச் சில ஆகமங்களில் சிவபெருமானும் தனது பேரின்பத்தை ஆன்மாவில் நின்று நுகர்வன் என்று கூறுகின்றன. ஆனால் சிவபெருமான், தனது இன்பம் நுகர்தற்கு ஆன்மாவைப்போல அழுந்தி அறிய வேண்டியதில்லை, அறிந்தால் மாத்திரம் போதுமானது.

ஓதாதெல்லாங் கற்றதோர் நூலினனாயும் களிறு செற்றானாயும் இருக்கின்ற கழிப்பாலை மேய கபாலப்பனார், உற்றதோர் நோய்களைந் திவ்வுலக மெல்லாங் காட்டுவானாகி உத்தமனாகியு மிருக்கின்றான் என்று இயைய உரைத்துப் பொருள் முடிவு செய்க. கபாலப்பனார்-எழுவாய்; உத்தமன் பயனிலை. இதனால் அருள் விளக்கத்துக்குப்பின் அடியார்களுக்கு உண்டாகும் ஆனந்த விளக்கமும் சிவபெருமானுக்கும் ஆன்மாவுக்குமுளதாகிய அத்துவித நிலையில் சிவபெருமான் ஆன்மாவோடுடனாய்நின்று ஆன்மாவைப் பேரின்பம் (ஆநந்தம்) நுகரச்செய்யும் நிலையும் கூறப்பட்டன.

மற்று இஃது ஓர் மாயக்குரம்பை நீங்க வழிவைத்தார்—மற்று—அசை. மேலே சொல்லப்பட்ட செற்றதோர் மனம் ஒழிதல்; சிந்தை செய்தல்; சிவமூர்த்தியென் றெழுதல் ஆகிய மூன்றும் அடியார் உலகப்பற்றை விட்டுத் துறவு நெஞ்சினராய்ச் சிவபெருமானை நோக்கிச் செய்யும் தவமாதலின் அடிகள் அவற்றைச் சாதியொருமையில் இஃது என்று குறிப்பிட்டார்.

மக்களால் நீங்குதற்கரிய மாயக்குரம்பை ஆதலின் ஓர் (ஒப்பற்ற) மாயக்குரம்பை என்றார். குரம்பை என்பது உடல்; அஃது இங்கே ஆகுபெயராய் உயிர்களை உலகநுகர்வுகளி விழுத்துச்செல்லும் வஞ்சப்பொறிகளோடு கூடிய உடலினது தன்மையைக் குறிக்கிறது. மாணிக்கவாசக அடிகள் குரம்பை நீங்க என்பதற்கு

ஊன் (உடல்) கெட்டு என்று கூறியதை நோக்குக. உடலினது தன்மை என்பது உடலை உயிரினின்று பிரியாது உடலையே உயிராக நோக்கும் தன்மை (Personality). மேலே வந்துள்ள கபாலப்பனார் என்பதை இதற்கு எழுவாயாக்கிக் கபாலப்பனார் இஃது (இதனை) ஓர் மாயக்குரம்பை நீங்கவழி (ஆக) வைத்தார் எனப்பொருள் முடிவுசெய்க.
வைத்தார் என்ற சொல்லோடு சேர்ந்திருக்கும் கு அசை.

அவ்வழியே நாம் போதும்—நாம் என்பது அடியார்களைக் குறிக்கிறது. அடிகள் தம்மை அடியார்களுடன் உளப்படுத்தி நாம் என்று கூறுகின்றார். போதும் என்பதில் தும் என்ற வினை விகுதி எதிர்காலத்தைக் காட்டுகின்றது. போதும் என்ற சொல் போய்ப் பேரின்பமடைவோமாக என்ற பொருளைக் குறிப்பாலே தந்துநின்றது. நாமே என்பதிலுள்ள ஏ அசை. அவ்வழியே என்பதிலுள்ள ஏகாரம் பிரிநிலையைக் குறிக்கிறது.

இந்த அருமைத் தேவாரப்பாட்டில் அடிகள் வீடுபேற்றை அவாவும் அடியார்களை நோக்கி அவர்கள் உய்யும்வழியைக் கூறுகின்றார், ஏனையோர்களுக்கு அதிற்கூறப்பட்ட தவங்கூடாமையின். இப் பாட்டில் ஒவ்வொரு கொத்திலும் மூன்று அடங்கிய மூன்று கொத்துக்கள் (Sets) கூறப்பட்டுள்ளன. பதவுரையில் உரை நடை செய்திருக்கிறபடி முதலாவது கொத்தில் சிவபெருமான் எல்லாம் அறியும் (1) பேரறிவும், எல்லா உயிர்களிடத்திலும் அன்பு செய்யும் (2) பேரன்பும், அவ்வுயிர்களுடைய பக்குவ மறிந்து அவை இன்பநலமடைதற்கு வேண்டுவன செய்யும் (3) பேராற்றலும் உடையவன் என்பது கூறப்பட்டது. இரண்டாவது கொத்தில் துறவு நெஞ்சுள்ள அடியார்கள் சிவபெருமானை அடைதற்குத் தங்கள் (1) அறிவினாலே செய்யும் செற்றதோர் மனம் ஒழிதலும் (2) தங்கள் அன்பினால் சிந்தை செய்தலும் (3) தங்கள் செயலால் சிவமூர்த்தி என்றெழுதலும் கூறப்பட்டன. மூன்றாவது கொத்தில் அடியார்கள் செய்யுந் தவக் கூறுபாடுகளைச் சிவபெருமான் அறிந்து பக்குவம் நோக்கி அவர்களுக்குச் செய்யும் (1) உற்றதோர் நோய் களைதலும் (2) உலக மெல்லாங் காட்டுதலும் (3) உத்தமனாய்த் தந்தை முறைமையிற் பேரின்பமளித்தலுங் கூறப்பட்டன.

இரண்டாவது கொத்தில் அடியார்களுடைய தவக்கூறுபாடுகளும், மூன்றாவது கொத்தில் அத்தவங்களால் சிவபெருமான் அடியார்களுக்கு அளிக்கும் தவப்பயன்களும், முதலாவது கொத்தில் அத்தவப்பயன்களை அடியார்களுக்கு அளித்தற்கு வேண்டுவன வாயுள்ள சிவபெருமானுடைய வல்லமைகளும் கூறப்பட்டுள்ளன. இம்மூன்று கொத்துக்களும் முறையே ஒன்றுக்கொன்று நேர்மையாயும் பொருத்தமாயு மிருத்தலைச் சிவநேயர்க ளுற்றுநோக்கிச் சிந்தித்து அகமகிழ்வார்களாக.

—மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

# இலக்கணமும் இலக்கியமும்:
# LANGUAGE AND LITERATURE

## தமிழ் யாப்பிலக்கண நூல்கள்

[வித்வான் மா. இராசமாணிக்கம் அவர்கள், P. O. L.]

குறிப்பு: இதனை ௩௨௬-ஆம் பக்கத் தொடர்ச்சியாகவும், ௩௪௪-ஆம் பக்கத்தின் முற்பகுதியாகவும் வைத்துப் படிக்க.

அவர், "ஐஞ்சீர் வெள்ளையுட் புகாமை யெற்றாற் பெறுது மெனின்,

'ஐஞ்சீர் அடுக்கலும் மண்டிலம் ஆக்கலும் வெண்பா யாப்பிற்குரிய அல்ல'

என்று நக்கீரர் அடிநூலுள் எடுத்தோதினமையாற் பெறுதும்" (சூ. 40-ன் உரை) எனக் கூறினமையால் அறிக. இதனைப் பேராசிரியரும் செய்யுளியல் சூ 43-ன் உரையிற் கூறியுள்ளார். எனவே, அவிநயர் நக்கீரது காலத்திலோ முற்பட்ட காலத்திலோ இருந்தவராதல் வேண்டும். ஆனால், அவிநயர் தொல்காப்பியரோடிருந்த பதினொருவருள் ஒருவராகக் கூறப்பட்டிருத்தலின் இவரும் இரண்டாம் கடல் கோளுக்கு முற்பட்டவர் என்பதில் ஐயமில்லை. யா. வி. உரையாளர் 15-ம் சூத்திரவுரையுள், "அவிநயத்துள்ளும்....... எனப் பொதுவகையாற் கூறி இன்ன இடத்து இன்ன எழுத்துப் பிறக்கும் என்று 'கணக்கியலுள்' புறநடை எடுத்தோதினார்" எனக் கூறுவதிலிருந்து, 'கணக்கியல்' என்பது அவிநயத்துள் 'ஓர் இயல்' என்பது புலனாதல் காண்க.

வாய்ப்பியர் என்பவரும் தொல்காப்பியரோடிருந்த பதினொருவருள் ஒருவர் எனக்கூறப்படுதலின், அவரும் குமரியாறு கடலால் கோள்ளப்படாமுன் இருந்தவர் என்பது புலனாம்.

(கி. மு. 504—கி. பி. 200)

பேராசிரியர் செய்யுளியல் முதற்சூத்திர வுரையில்

"......'வடதிசை மருங்கின் வடுகு வரம்பாகத்
தென்றிசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும்'

எனத் தொடங்கித் தென்திசையும் கடலே எல்லை எனக் கூறலால், சிறுகாக்கை பாடினியார் குமரியாறு கடல் கொள்ளப்பட்ட பின்னர் இருந்தவர்" என்பர். இடைச் சங்கத்துக் காக்கை பாடினியாரை நோக்கி, இவர் 'சிறு காக்கைபாடினியார்' என வழங்கப்பட்டனர் என்க. இவரன்றிப் பரிமாண

ஞர், நல்லாறனர் செய்த இலக்கண நூல்களும், நக்கீரர் நாலடிநாற்பதும், செய்யுள் இயல் முதலியனவும் இக்காலத்திய நூல்களாம். மாதிரிக்கொரு சூத்திரமாகப் படித்துப் பார்ப் பினும் இவற்றின் பழமையும் அருமையும் நன்குணரலாம்.

(கி. பி. 200—கி. பி. 1120)

தமிழ்ப் புலவரும் வடநூல்வழித் தமிழாசிரியரும் செய் தவை சங்கயாப்பு, பாட்டியல்நூல், மாபுராணம், யாப்பருங் கலம், யாப்பருங்கலக்காரிகை, வீரசோழியம் (இது யா. வி. உரையில் குறிக்கப்படவில்லை) முதலியனவாம்.

இதுகாறும் யாம் காலமுறையிற் பகுத்துக் கூறிய இந் நூல்கள் அவ்வக்காலத்தேதான் செய்யப்பட்டனவாதல் வேண்டும் என்பதற்கு வேண்டும் ஆதாரங்களைக் காட்டுதல் இன்றியமையாததாகும். முதல் இரு சங்கங்கட்குரிய நூல்க ளையும் அவற்றின் காலத்தையும் முன்னரே விளக்கினேம். பிற் பட்ட இருகால நூல்கள் அவ்விரு காலங்களிற்முன் செய்யப் பட்டிருத்தல் வேண்டும் என்பதைத் தக்க சரித்திரச்சான்று கொண்டு விளக்குவோம்: அதன் முன்னர்த் தமிழகத்தில் யாப்புநூலில் பரந்துபட்ட காலஅளவில் கருத்து வேறுபாடு கள் இருந்தன என்பதைக் கீழ்வருவன கொண்டு உணர்தல் நலமாகும்.

“அஃது ஈறுபற்றி அறியும் தன்மைத்தாகலின், இயை புத் தொடைக்கு இவ்வாறு எட்டு விகற்பமும் சொன்னார் கையனர்—தொல்காப்பியனர் முதலிய ஒருசார் ஆசிரியர். ஈண்டு அவர் மதவிகற்பம் பற்றிச் சொல்லப்பட்டது இது சார்பு நூலாகலின்” (யா. வி. சூ. 34-ன் உரை) எனவும், “...... வெண்சீரின் ஈற்றசை நிரையசையாகவும் இயற்றித் தொல் காப்பியனரும் நற்றத்தனரும் முதலாகிய ஆசிரியர் சொன்ன மதமெல்லாம் வல்லார்வாய்க் கேட்டுணர்க” (யா. வி. சூ. 95-ன் உரை) எனவும், “நான்கு பாவிற்கும் பெருமைக்கெல்லை பாடுவோனது பொருள் முடிபின் குறிப்பே, வரையறை இல்லை என்பாரும், அடிவரையறுத்துச் சொல்வாரும் என இருதிறத் தார் ஆசிரியர் என்பது அறிவித்தற்கென்க” (யா. வி. சூ. 32-ன் உரை) எனவும், “தொல்காப்பியனர் நக்கீரனர் முத லாகவுள்ள ஒருசார் ஆசியர் ஆசிரியத்துள்ளும் கலியுள்ளும் ஐஞ்சீரடியும் அருகிவரப் பெறும் என்று கூறினர்” (யா. வி. சூ. 95-ன் உரை) எனவும், “காக்கைபாடினியாரும் பாட்டி யலுடையாரும் யாப்பியல் உடையாரும் முதலிய ஒரு சாரா சிரியர் இவற்றையும் இனத்தின்பாற்படுத்தி வழங்குவர்.

தொல்காப்பியனார் முதலிய ஒருசார் ஆசிரியர் இவற்றையும் மேற்கூறப்பெற்ற பாவினங்களையும் கொச்சகக் கலிப்பாற் படுத்தி வழங்குவர் எனக் கொள்க. இனி ஒருசார் வடநூல் வழித் தமிழாசிரியர் 'ஒருபுடை ஒப்புமை நோக்கி இனமெனப் படா; மூவகைப்பட்ட விருத்தங்களுள்ளும் சந்தத் தாண்டகங் களுள்ளுமே பட்டடங்கும் என்பர். இந்நூலுடையார், காக்கை பாடினியார் முதலிய ஒருசார் ஆசிரியர் மதம்பற்றி எடுத்தோதி இவையும் உடன்பட்டார் எனக் கொள்க'' (யா. வி. பக்கம். 475) எனவும் வருவன—அமிதசாகரர் காலத்தும் உரையாளர் காலத்தும் அவர்க்கு முற்பட்டுப் பரந்துபட்ட காலங்களிலும் பல யாப்பிலக்கண நூல்களும் கருத்து வேறு பாடுகளும் இருந்தமை கவினுறக் காட்டுகின்றன அல்லவா?

ஈண்டுக் காட்டப்பெற்றவருள் கையனார், தொல்காப்பி யனார், நற்றத்தனார், அவிநயனார், நக்கீரனார் முதலியோர் ஒரு சாரர்; காக்கை பாடினியார், யாப்பியலுடையார், பாட்டியல் உடையார், முதலியோர் பிறிதோரு சாரர்; வடமொழிப் புல மையும் தமிழ்மொழிப் புலமையும் ஒருங்கே பெற்ற 'வட நூல்வழித் தமிழாசிரியர் மூன்றும் பிரிவினர். இக்கடைப் பிரிவினர் கி. பி. 200—கி. பி. 1120-க்குட்பட்டவராவர்; என்னை?

---

# குறுந்தொகை

## மூலமும் விளக்க உரையும்

[இலங்கையடிகள் வித்வான் இரா. சிவ. சாம்பசிவன்]

(பதிப்புரிமை ஆசிரியர்க்கே)

### குறிஞ்சி

*தலைவன் தலைவியற்கிடையே நிகழும் களவொழுக்கம் அவ்வூ ரார்க்குப் புலனாக, அலர் பெரிதாயிற்று; அங்ஙனமாகியும் வரைந்து கொள்ள நினையாது இரவுக்குறி வேண்டிய தலைமகனுக்குப் பாங்கி இசைந்தாற்போல மறுத்தது.*

கபிலர் பாடியது

42. காம மொழிவ தாயினும் யாமத்துக்
கருவி மாமழை வீழ்ந்தென வருவி
விடரகத் தியம்பு நாட வெந்
தொடர்புந் தேயுமோ நின்வயி னானே.

என்பது இரவுக்குறி வேண்டிய கிழவற்குத் தோழி நேர்ந்தவாய் பாட்டான் மறுத்தது.

பதவுரை:—

யாமத்து—இரவில், கருவி மாமழை வீழ்ந்தென—உலகத்திற்குக் காரணமாகிய பெருமழை பொழிந்ததும், அருவி விடரகத்து இயம்பும் நாட—அருவி மலைமுழையில் பாய்ந்து ஒலிக்கும் மலைநாட்டுத் தலைவனே, காமம் ஒழிவது ஆயினும் (அறத்தின் வழித்தன்றி நிகழும்) களவொழுக்கத்துக் காமம் கைவிடத்தக்கதாயினும், நின்வயினானே, எம் தொடர்பும்—உன்னிடத்தில் பொருந்தியுள்ளதான எம்முடைய தொடர்ச்சிக்குக் காரணமாய பற்றும், தேயுமோ—குறைந்துவிடுமோ? (குறையாது).

யாமம்—நள்ளிரவு. கருவி மாமழை—உலகவாழ்விற்கு முதற்காரணமாய் மாட்சிமைப்பட்ட மழை. கருவி—தொகுதியுமாம். விடர்—மலைப்பிளவு, தேயுமோ—ஓகாரம் எதிர்மறை. காமம்—கற்பொழுக்கமில்லாது களவொழுக்கத்தில் பொருந்துவதாகிய காமம்.

இறைச்சிப்பொருள்:—

இரவில் மழை பெய்ததும் அருவிகள் விடரகத்து முழங்கும் என்றது தலைவன் களவொழுக்கத்தில் கூடித் தலைவிக்குக் கருணை செய்தது ஊரில் அலராயிற்று என்பதாம்.

மேற்கோள் விளக்கம் :—

1. 'யாமம்' 'நள்ளென்றன்றேயாமம்' —குறுந். 6

2. 'கருவிமாமழை வீழ்ந்தென அருவி விடரகத்தியம்பும்'—

(அ) 'அருவிமாமலைத்தக்க
கருவிமாமழை சிலைதருங் குரலே' —குறுந். 94

(ஆ) 'கருவிமாமழை' —கம்ப. அயோத். சித்திர. 14

(இ) 'கருவி மாமழை' —நைடதம். நாட்டு. 1

(உ) 'கருவிவானந் தலைஇயாங்கு' —புறம் 159-19

(ஊ) 'கருவி வானந்துளி சொரிந்தாங்கு' —பெரும்பாண் 24

(எ) 'கருவிமாமழை கனைபெயல் பொழிந்தென'
—சீவக. 2752

(ஏ) 'கருவிவானம் போல' —புறம். 204-13

கருவிமாமழை என்பதில் கருவி என்பதற்கு "மின் முதலிய தொகுதியையுடைய மழை' என்றும், "மின்னும் இடியும் முதலாகிய

தொகுதியையுடைய மழை" என்றும் புறநானூற்றுரையாசிரியர் கூறுவர்.

"கடவுளதாணையான் உலகமும் அதற்குறுதியாகிய அறம் பொருளின்பங்களும் நடத்தற்கு ஏதுவாகிய மழை" எனப் பரிமேலழகர் கூறியிருப்பதும், 'வானின்றுலகம் வருதலால்" என வள்ளுவர் வாய்மொழியும் ஈண்டு கருதற்பாலன.

"கருவி மாமழை கனைபெயல் பொழிந்தென வழிநாளருவி போற் றொடர்ந்து" என்னும் சீவகசிந்தாமணிச் செய்யுளடிகட்கு நச்சினார்க்கினியர், "பெருமழை பெய்ததாகப் பின்னர்ச் சில கல்லிடையருவி இடையறு தொழுகுமாறு போலே" என்று எழுதியிருப்பது நோக்கத்தக்கது. நாம் அலர் அஞ்சுவோம் என்பாள் "காமமொழிவதாயினும்" என்றும், நீ அலரஞ்சலை, இரவின் வரும் ஏதம் எண்ணலை என்பாள், "அருவி விடரகத்தியம்பும்நாட' என்றும் கூறியவாறும்.

**மெய்ப்பாடு**—அச்சம்.

**பயன்**—வரைவுகடாதல்.

பாலை

தலைவியிடம் கூறாது பிரிந்து சென்ற தலைவனது பிரிவு நீட்டித்தவழிப் பிரிவாற்றாது வருந்திய தலைவி தோழிக்குச் சொல்லியது.

ஔவையார் பாடியது

43. செல்வா ரல்லரென் றியானிகழ்ந் தனனே;
விடுவா ளல்லளென் றவரிகழ்ந் தனரே;
ஆயிடை யிருபே ராண்மை செய்த பூச
னல்லார்க் கதுவி யாங்கென்
னல்ல னெஞ்ச மலமலக் குறுமே.

என்பது பிரிவிடை மெலிந்த கிழத்தி சொல்லியது.

பதவுரை:—

செல்வார் அல்லரென்று—தலைவர் என்னைவிட்டுப் பிரிந்து செல்லமாட்டாரென்று, யான் இகழ்ந்தனனே—நான் அலட்சியமாக இருந்தேனே, விடுவாள் அல்லள் என்று—தன் பிரிவைக் கூறின் போகவிடமாட்டாள் என்று கருதி, அவர் இகழ்ந்தனரே—அவர் என்னிடம் கூறாது இகழ்ந்து சென்றனரே, ஆயிடை—இவ்வாறிருவரிடையிலும் நிகழ்ந்தது, இருபேர் ஆண்மை செய்த பூசல்—இரண்டுபேர்கள் தம்முள்

பகைத்து வலிமையோடு செய்த சண்டை, நல்லார்க் கதுவி யாங்கு—அதில் தொடர்பிலா நல்லோரை வருத்தினாற்போல, என் அல்லல் நெஞ்சம்—என்னுடைய துன்பத்தையுடைய உள்ளம், அலமலக்கு உறுமே—(மிக்க துன்பத்தால்) கலக்க மடையுமே.

இகழ்தல்—பொருட்படுத்தாதிருத்தல். அ + இடை = ஆயிடை; 'தூக்காதலின் சுட்டு நீண்டது.' ஆண்மை—ஆகுபெயர். பூசல்—சண்டை. அலமலத்தல்—கலங்குதல். கதுவுதல்—பற்றி வருத்தல். கதுவியாங்கு—ஆங்கு—உவம உருபு. பூசல்—பிரிந்தவிடத்துண் டாகிய அலர்.

மேற்கோள் விளக்கம்:—

1. "ஆயிடை யிருபேராண்மை செய்த பூசல்" "என்புழி ஆயிடை என்பது உருபு ஆதலின், 'நீடவருதல் என்பதனான் முடியாது நீண்டு வகர ஒற்று வேறுபடமுடிந்தது."

—(தொல். எழுத். சூ. 483. உரை)

2. "என் என்பது சொல்லுதல் என்னும் தொழில் குறித்துப் பெயர்வினைகட்குரிய விகுதிகளுடனே வரும்" என்பதற்கு, "செல்வாரல்லர்......அவரிகழ்ந்தனரே" என்னும் முதலிரண்டடிகள் மேற்கோள். —நன். மயிலை. பக். 289

3. "அறியாமைப் பிரிந்த தலைமகனையுடைய கிழத்தி சொல்லியது" என்பதற்கு,

"செல்வாரல்லர்.........அலமலக்குறுமே" என்னும் இச்செய்யுள் மேற்கோள். —இறையனாரகப்பொருள் பக். 250

4. 'தலைமகளிரங்கல்' என்பதற்கு இச்செய்யுள் மேற்கோள்.

—நம்பியகப்-சங்கம்.

1. 'விடுவாளல்லளென்று'—'வீவாளல்லளென்று'

—பிரதிபேதம்.

இச்செய்யுளில் நான்காமடியிலுள்ள 'பூசல்' என்பது மூன்றா மடி யீற்றிலமைக்கப்பட்டு 'ஆயிடை' என்பதைக் கூன் எனக்கொண்டு வரைவாரும், 'ஆயிடை' என்பதைக் கூனாகக்கொள்ளாது வரை வாருமுண்டு.

மெய்ப்பாடு—இளிவரல்.

பயன்—ஆற்றாமை அறிவித்தல்.

---

# ஆனைந்து

[திரு. துடிசைக்கிழார் அ. சிதம்பரனார் அவர்கள்]

(முன் ௩௩௬-ஆம் பக்கத் தொடர்ச்சி)

III. கோசலம், கோமயம் சேர்ந்த ஆனைந்தைக் கோயில்களில் உபயோகப்படுத்துவதில்லை. இது கண்கூடு. ஆனைந்து சிவபெருமானுக்கு நனி உகந்ததாயிருந்தும், உபயோகப் படுத்தாததற்குக் காரணம் என்ன?

IV. ஆகமத்தில் கோசலம், கோமயம் கூறப்பட்டிருந்தால் கோயில் குருக்கள்மார் விட்டுவிடக் காரணம் இல்லை. தமிழ் மறைகளில் இருந்தாலல்லவோ ஆகமங்களில் இருக்கும்? ஆகையால் ஆகமங்களில் கோசலம் கோமயம் கூறவில்லை என்பது திண்ணம்.

V. ஒவ்வொரு உடலுக்கும் ஒன்பது வாயில்கள் உண்டு. ஆக்களுக்கும் ஒன்பது வாயில்கள் உண்டு. அவையாவன:—

| | | | |
|---|---|---|---|
| கண்கள் | 2; | மூக்குகள் | 2; |
| செவிகள் | 2; | வாய் | 1; |
| நீர்விடும் தாரை | 1; | எருவிடும் வாயில் | 1; |

ஆக 9.

இவ்வொன்பது வாயில்களினின்றும் உண்டாகும் கசிவு நீர்களும், கழிவுபதார்த்தங்களும் யாதொன்றுக்கும் பயன்படா. அவை இயற்கையாகவே கழிக்கப்பட்டவை. கடவுளுடைய கருத்தும் அதுவே. ஆகையால் கழிவிடங்களிலிருந்து வரும் கோசலமும் கோமயமும் பயன்படமாட்டா.

ஆனால், ஆவின் மடியானது இவ்வொன்பது வாயில்களில் ஒன்றிலும் சேராது. அது கெட்ட நீர்களைக் கழிக்க ஏற்படுத்தப்பட்டதல்ல.

அமிழ்தமயமான பால் உற்பத்திக்காகக் கடவுளால் ஏற்படுத்தப்பட்டது.

தாய்ப் பாலுக்குப் பின் ஆருயிர்களுக்கு உலகில் ஆவின் பாலே சிறந்தது.

மனிதர்களுள்ளும் முலைக்காம்புகள் ஒன்பது வாயில்களில் சேரவில்லை. இந்தப் பாகுபாடு ஒன்றே கழிவிடங்களிலிருந்து உண்டாகும் பொருள்கள் சிவபெருமானுக்கு ஆகா. ஆகையால் நமக்கும் ஆகா என்று தெரிவிக்கிறது. ஆகையால் அமிழ்த

மயமான பாலுடன் கழிவு பதார்த்தங்களாகிய கோமயம், கோசலம் சேரா என்பது வெள்ளிடை மலையாம்.

VI. மேலும், மனிதர்கள் தாங்கள் எதனை விரும்பிப் புசிக்கிறார்களோ அதனையும், எதனை விரும்பி ஆடுகிறார்களோ அதனையும், எதனை விரும்பி அணிந்து கொள்ளுகிறார்களோ அதனையும் கடவுளுக்குப் புசிப்பித்து, ஆட்டி, அணிந்து வந்தார்கள்.

கொங்கு நாட்டின்கண் ஒருவன் ஊர்கள் தோறும் சென்று உற்றுநோக்குவானானால் கொங்கு வேளாளர்களும் ஏனைய குடிமக்களும் பால், தயிர், நெய், மோர், வெண்ணெய் இவற்றில் ஏதாவதொன்றையாவது அல்லது எல்லாம் சேர்ந்த கலவையையாவது தலைக்குத் தேய்த்து, ஊறவைத்திருந்து, பின் முழுகுவதைக் காணலாம்.

கோசலத்தையும் கோமயத்தையும் தேய்த்து முழுகுவாரைக் கண்டதுமில்லை கேட்டதுமில்லை. அவை முழுக்குக்கு உரிய பொருள்களென்று இதுவரை சொன்னவர்தாமும் கிடையாது. அப்படியிருக்க முழுக்குக்கு ஆனைந்தில் கோசலமும் கோமயமும் சேருவதெப்படி?

VII. வீடுகளில் மெழுகும்போது சாணிப்பால் கல்லின் மேல் படக்கூடாதென்பதும் கற்களை நீர்விட்டே கழுவ வேண்டும் என்பதும் தமிழ்நாட்டுப் பெண்களும் அறிந்தனவே. இந்த ஒரு வழக்கமே சிலாவிக்கிரகங்களின் மேல் சாணிப் பால் படக்கூடாதென்பதைத் தெரிவிக்கும். அதனாலேயே "ஆனைந்தில்" கோசலமும் கோமயமும் சேராது. வேறே இரண்டு பொருள்கள் அவைகளுக்குப் பதிலாக இருக்கவேண்டும் என்பது விளங்க வில்லையா?

ஆகையால் ஆன் = பால் "ஆனைந்து" = பாலும் பாலிலிருந்து உண்டான தயிர், நெய், மோர், வெண்ணெய் ஆக ஐந்தும் என்றே பொருள்கொள்ளவேண்டும். அப்போது ஆன் என்பது ஆகுபெயராகும். ஆனைந்து = பாலாம் ஐந்து என்பது பொருள்.

இனி ஆரியர்களுடைய இருக்குவேதத்தைத் துருவிப் பார்த்தால், முதல் மண்டிலம்—104-வது சுலோகத்தில்,

"குயவன் என்பவனின் மனைவியர் இருவரும் பாலிலேயே தலை முழுகுகிறார்களே. அவர்கள் சிபா ஆற்றின் ஆழத்திலே அமிழ்ந்தி இறவார்களா?"

என்று தமிழர்கள் இனிமையாக வாழ்தலைக்கண்டு மனம்பொறாமல் வயிறெரிந்து இந்திரனை நோக்கிப் பாடி இருக்கிறார்கள்

இதனை நோக்குமிடத்து, ஆரியர் அக்காலத்தில் பாலிலே தலைமுழுகி அறியாதவர்கள் என்று தெரிகிறது. அதனாலேயே ஆனைந்தின் குணத்தை அறிந்து உபயோகப்படுத்தினவர்கள் அல்லர்.

பிற்காலத்தில் அவர்கள் தமிழர்களுடன் பழகினபிற்பாடு ஆனைந்தை உபயோகப்படுத்த முயன்றபொழுது தெரியாத்தன்மையாலோ வேறெந்தக் காரணத்தை முன்னிட்டோ ஆனைந்தில் மோர்—வெண்ணெய்க்குப் பதிலாகக் கோசலத்தையும் கோமயத்தையும் உபயோகப்படுத்தி வந்தார்கள். அந்த வழக்கத்தைத் தான் பிற்காலத்தில் ஸ்மிருதிகளில் நுழைத்து விட்டார்கள்.

ஆனைந்து என்பதற்கு இன்னொரு பொருளும் கூறலாம். ஐந்து பசுக்களாகிய நந்தை, பத்திரை, சுரபி, சுசீலை, சுமனை இவற்றினின்றும் உண்டாகும் பால் என்பது.

## 7-ம் இயல்

### தமிழர் கையாளும் முறை

ஆனைந்து என்பது இற்றென இதுகாறும் ஆதாரங்களானும் கடாவிடைகளானும் நிலை நாட்டினோம். அது தான்:—

(1) பால் (2) தயிர் (3) நெய் (4) மோர் (5) வெண்ணெய்

ஆகாயம் வாயு தேயு அப்பு பிருதிவி

இவ்வைந்துமே ஆனைந்து. இவ்வைந்தும் அஞ்சு பூதங்களின் குணத்தைக் கொண்டனவாகும்.

உலகவழக்கில் தயிர் விட்டுக் கொண்டதால் வாயு உபத்திரவம் உண்டாயிற்றென்றும், மோர் விட்டுக் கொண்டதால் சளி பிடித்து விட்டதென்றும் கூறுவதே பஞ்சபூதங்களின் குணம் அவற்றிற்கு உண்டென்பதை நாட்டும்.

இவ்வைந்து பொருள்களையும் ஒன்றுசேர்த்து உபயோகிக்க வேண்டும். அவற்றை ஒன்று சேர்ப்பதற்குத் தமிழர் ஒரு வித முறையைக் கையாண்டு வந்திருக்கிறார்கள்.

உலகில் ஒவ்வொன்றுக்கும் ஓர் ஒழுங்கு வேண்டியிருக்கிறது.

ஒழுங்கில்லாத காரியம் வழுவே
ஒழுங்கையுடையது ஒழுக்கம் ஆகும்.

நம் வீடுகளில் நடக்கும் நடவடிக்கைகளை நாம் கவனிப்போமானால் இவ்வொழுங்கு நமது கண்ணுக்குப் புலப்படும்.

நம் வீடுகளை விட ஐரோப்பியர் வீடுகளில் இவ்வொழுங்குகள் செவ்வனே விளங்கும்.

சமையலுக்கு ஒரு இடம், குளிப்பதற்கு ஒரு இடம், மலசலம் கழிப்பதற்கு ஒரு இடம், பாத்திரங்களை வைக்க ஒரு இடம், தானியங்களைச் சேமித்து வைக்க ஒரு இடம், படுக்க ஓர் இடம், படிக்க ஓர் இடம், அதிதிகளை வரவேற்க ஒரு இடம், இப்படியாக ஒழுங்கு முறைகளைக் கவனிக்கலாம்.

ஒன்று செய்யும் இடத்தில் இன்னொன்று செய்தல் கூடாது. இப்படிச் செய்யக் கூடாதென்பதனை அவரவர்கள் அறிவே அவரவர்களுக்கு அறிவுறுத்தும்.

அதுபோல, ஆனைந்தைக் கூட்டுவதற்கும் ஒரு முறை வேண்டியிருக்கிறது.

தமிழர் தங்கள் பழைய முறையை மறந்துவிட்டார்கள். ஆரியர் முறையில் வெகுகாலமாய் ஈடுபட்டிருக்கிறார்கள்.

ஆரியர்கள் முறை இன்னதென்று 2-ம் இயலில் கூறினும்.

ஆரியர்கள் தென்னாட்டுக்கு வந்து பின் பத்ததிகள் ஏற்பட்டபிறகு தமிழ ஆரியர்கள் கைக்கொண்ட முறை இன்னதென்று 3-ம் இயலில் கூறினும்.

ஆகையால் முறைகள் அந்தந்தக் காலத்துக்குத் தகுந்தது போலும் இடத்துக்குத் தகுந்ததுபோலும் நடைபெற்று வந்திருக்கின்றன. ஒவ்வொரு வகுப்பார் கூறும் மந்திரங்களும் வித்தியாசப்படுகின்றன.

ஆகையால், இக்காலத்துக்குத் தக தமிழ்நாட்டார் அநுசரிக்கவேண்டிய முறையைக் கீழே கூறுகின்றும்:—

ஆனைந்து கூட்டுவதற்கு ஆரம்பிப்பதற்கு முன் விநாயகர் பூசையும் நீர் வழிபாடும் நடைபெறவேண்டும். அவ்விரண்டினையுங் குறித்துத் தனிநூல்களாக வெளியிட்டிருக்கிறபடியால் ஆண்டுக் கண்டுகொள்க

பிறகு மண்டபத்தின் (கிருதி) தென்மேற்கு மூலையில், அல்லது, விநாயகர் பூசைக்குப் போடப்பட்ட வாழையிலை

யின் தென்மேற்கு மூலையில் அரிசியையோ, நெல்லையோ பரப்பி அதில் கீழ்கண்ட பிரகாரம் 9 கோட்டங்கள் அமைத்து, அதில் 1-2 என்று காட்டிய வரிசைப்படி 6 சிறிய கிண்ணங்களோ அல்லது தொன்னைகளோ வைத்து, வட்டகையிலுள்ள நீரினால் பாத்திரங்களில் தெளித்து சுத்தியானதாகப் பாவித்து

| | | |
|---|---|---|
| 6 | 2 | |
| 4 | 1 | 3 |
| | 5 | |

1-வது தொன்னையில் பாலும்
2-வது ,, தயிரும்
3-வது ,, நெய்யும்
4-வது ,, மோரும்
5-வது ,, வெண்ணெயும்
6-வது ,, தர்ப்பையும் நீரும்

விட்டு, அந்தந்தக் கோட்டத்தில் காட்டிய எண்படிக்கு சிவ மூல மந்திரத்தை அத்தனை தடவை செபித்துப் பிறகு.

| | |
|---|---|
| 5-ல் உள்ளதை | 4-லும் |
| அவ்விரண்டையும் | 3-லும் |
| அம் மூன்றையும் | 2-லும் |
| அந் நான்கையும் | 1-லும் |
| பிறகு ஐந்தையும் சேர்த்து | 6-லும் |

விட்டு, தர்ப்பையால் நன்றாய்க் குழைத்து, சுற்றிவளைத்தல், திக்குக் கட்டு, தேனுமுத்திரை முதலிய முத்திரைகளைக் கொடுத்து மறுபடியும் மூடுதல் முத்திரையுடன் சிவமூல மந்திரத்தை 21 தரம் செபிக்க வேண்டும். தீட்டுக்காயிருந்தால் 108 தரம் செபிக்கவேண்டும்.

பிறகு ஆனந்தைக் காதுபோல் மடித்த ஒரு மாவிலையால் எடுத்து மூன்று தரம் பருகவேண்டும். பருகும்போது தீட்டைப் போக்குகிறதற்காகச் செய்திருந்தால் "தீட்டுப் போய் விட்டதாகவும்" நோய் நீக்கத்திற்காகச் செய்திருந்தால் "நோய் நீங்கிவிட்டதாகவும்" பாவிக்கவேண்டும்.

சிவபெருமானுடைய முழுக்குக்கா யிருந்தால் செபித்தானதும் சிவபெருமானுக்கு நிதானமாக முழுக்காட்ட வேண்டும்.

முத்திரைகளும் பாவனையும் அவசியம் இருக்கவேண்டும். அவைகள் இல்லாமல் செய்யும் கிரியை அவமேயாகும்.

முத்திரைகள் என்பது ஆங்கிலத்தில் (Passes) பாஸஸ் என்று சொல்லப்படும். மெஸ்மெரிசம், ஹிப்நாடிசம் படித்தவர்களுக்கு இவை நன்றாய்த் தெரியும். பாவனைகள் என்பது தான் மந்திரங்கள். ஆங்கிலத்தில் அவைகளை (Suggestions) சஜெஸ்ஷன்ஸ் என்று கூறுவார்கள்.

முக்கரண சுத்தியாய் யாரொருவன் எதனை நினைத்து அதற்குரிய சைகைகளுடன் எதனைச் செய்கிறானோ அதனுடைய பலனை அடைகிறான். அந்த மந்திரம் எந்த மொழியில் இருந்தாலும் இருக்கலாம். மனம் மந்திரத்தோடு ஒற்றுமைப்பட வேண்டும். பலனைச் சீக்கிரம் அடையத் தமிழ் மொழியே மந்திரங்களுக்குச் சிறந்தது.

இந்த முறையும் விரிந்துள்ளது என்று நினைக்கிறவர்கள் இன்னும் சுருக்கமாகவும் செய்யலாம். அதாவது ஒரு வாழை யிலையில் அரிசியைப் பரப்பி, பிரணவத்தை வரைந்து அதன் பேரில் தொன்னை ஒன்றை வைத்து, அதிலேயே முதலில் பாலும், பிறகு தயிரும், பிறகு நெய்யும், பிறகு மோரும், பிறகு வெண்ணெயும், பிறகு நீரும் விட்டுத் தர்ப்பையால் குழைக்கவேண்டும். ஒவ்வொன்றையும் விடும்போது சிவ மூலமந்திரத்தை 1.க்கு ஒரு தடவையும் 2 க்கு இரண்டு தடவையுமாக முறையே செபித்துப் பிறகு முன்போலவே எண் வகை முத்திரைகளைக் கொடுத்து 21-தரம் மூலமந்திரத்தால் அபிமந்திரித்துப் பின் உட்கொள்ளவேண்டும்.

ஆனைந்தோடு சலம் சேர்ப்பதானது ஐந்து பொருள் களையும் நன்றாக ஒன்றுசேர்த்தற்கும் சேர்க்கப்பட்ட பொருள்களின் குணங்களைத் தேகத்திற்குத் தக்க பிரகாரம் மாற்றுகிறதற்கும் என்று அறிக.

இது பாலுக்கு நீர் சேர்த்துக் குழந்தைகளுக்கு உபயோகிப்பதுபோல.

பாலோடு நீர் சேர்த்தபோதிலும் "பால்" என்றே சொல்லுவதுபோல ஆனைந்தோடு நீர் சேர்த்தாலும் "ஆனைந்து" என்றே கூறப்படும். "நீர்" எண்ணிக்கையில் சேராது.

இந்த மாதிரி ஆனைந்தைக் கூட்டி உபயோகப்படுத்திக் கொள்வதற்குப் புரோகிதர்கள் வேண்டுவதில்லை. அவரவரே செய்து கொள்ளலாம்.

தானே செய்து கொள்ளுவது தான் சிறப்பானது; பலன் மிக உண்டாம்.

"தான்செய்வது உத்தமம்
மகன்செய்வது மத்திமம்
ஆள்செய்வது அதமம்"

என்ற பழமொழியைக் கவனிக்க.

சிவமூலமந்திரம்—சிவாயநம
பிரணவம்—ஓம்.

எண்வகை முத்திரைகள் ஆவன:—

(1) பார்த்தல் (நிரீக்ஷணம்)
(2) தெளித்தல் (புரோட்சணம்)
(3) தட்டுதல் (தாடனம்)
(4) மூடுதல் (அப்யுக்கணம்)
(5) முத்தட்டு (இடது உள்ளங்கையில் வலது விரல்களால் மூன்று தரம் தட்டுதல் (தாளத்திரயம்)
(6) திசைக்கட்டு (திக்குபந்தனம்)
(7) வளைத்தல் (அவகுண்டனம்)
(8) அமிர்தம் சொரிதல் (தேனுமுத்திரை)

மனத்திலிருந்து உண்டாகும் ஆத்ம சத்தியானது, மின்சார சத்திபோல, கண் பார்வையின் மூலமாகவும் கைவிரல்களின் மூலமாகவும் வெளிவந்து குறித்த பொருள்களின் மேல் பட்டு சுத்திகரிக்கும் என்பது தத்துவநூலின் கொள்கை. ஆகையால் முத்திரைகளைச் செய்தே தீரவேண்டும்.

(முற்றும்)

---

# முருகன்

[திருச்சி, M. C. கல்யாணசுந்தரம் பிள்ளை, B. A., B L.]

முருகு என்ற சொல்லுக்கு இளமை, அழகு, வாசனை என்ற பொருள்கள் ஏற்படும். ஆகவே முருகன் என்றால் இளமையுடையவன், அழகுடையவன், வாசனையுடையவன் என்று கொள்ளுதல் வேண்டும் அதற்கிணங்கவே முருகக் கடவுளும் என்றும் இளமையுடையவராயும், மிக்க அழகுடையவராயும் காட்சியளித்து வருகிறார். அவரிடம் எப்பொழுதும் நறுமணங் கமழ்ந்துகொண்டிருக்கும். இளமையும் அழகும் ஒருங்கு சேர்ந்திருக்குமிடத்து வாசனையில்லாதிருக்க முடியாது. முருகன் என்றவுடனே நம்மனக்கண்முன் தோன்று

வது ஓர் மிக அழகிய, கட்டிளமை வாய்ந்த தெய்வ மணங்கமழும் வடிவமன்றோ? இதுபற்றியே நக்கீரர் திருமுருகாற்றுப் படையில் "மணங்கமழ் தெய்வத்து இளநலங் காட்டி" என்று மிக அழகுபடக் கூறியிருக்கிறார். முருகன் இளமையின் தெய்வம். அவனே அழகின் கடவுளும்.

முழுமுதற் கடவுளும், பதியுமாகிய பரம்பொருள் உயிர்களாகிய நாம் உய்யும்பொருட்டு முருகனைத் தோன்றியுள்ளது. முருகனும் சிவனும் ஒன்றே. முருகனே பரமசிவம். இது பற்றியே குமரகுருபரசுவாமிகள் கந்தர் கலிவெண்பாவில், 'மலர்க்கண் மூன்றும், தாழ்சடையும் வண்மழுவும் மானுமுடன் மால்விடைமேல் மின்னிடத்துப் பூத்த பவளப் பொருப்பொன்று வெள்ளி வெற்பில் வாய்த்தனைய தெய்வ வடிவாகி" என்று கூறியுள்ளார். அருணகிரிநாதரும் தெய்வத் திருப்புகழில் முருகனை "படைத்தளித்தழிக்கும் திரிமூர்த்திகள் தம்பிரானே" என்று புகழ்ந்துள்ளார். மலைமாதொடு கூடிய ஆதிப்பிரானுக்கும் வள்ளி தெய்வயானை அம்மைகளோடு கூடிய முருகப்பிரானுக்கும் யாதொரு வேறுபாடும் கிடையாது.

முருகன் அடியார்களுக்கு மிக்க எளியவன்; அவனை அன்புடன் வழிபடுவோர்கள் விரும்புவதை அக்கணமே அளிக்கவல்ல பேரருளாளன். அவன் "பதினுலகத்தினிஓற்றுறு பத்தர்கள் ஏது நினைத்ததும் மெத்த அளித்தருள் இளையோன்." அவனை வழிபட நாம் அவனைத் தேடி அலைய வேண்டியதில்லை. அவனிடம் அன்பு செலுத்துவோமாயின் அவனே நம்மை நாடிவந்து அருள்புரிவான். இது பற்றியே அருணகிரியப்பர் "மாசிலடியார்கள் வாழ்கின்ற ஊர் சென்று தேடி விளையாடியே அங்ஙனே நின்று வாழும் மயில் வீரனே செந்தில் வாழ்கின்ற பெருமானே" என்று கூறியுள்ளார்.

தமிழ்க் கடவுளாகிய முருகன் விரும்பி ஏற்றுக்கொள்வது இனிய தமிழ்ப் பாடல்களே. அவன் தமிழினிடம் மிக்க விருப்புள்ளவன். அவனருளைப் பெறுவதற்குச் சுலபமான வழி அவனைத் தமிழ்ப் பாடல்களால் பாடித் துதித்தலேயாகும். அருணகிரியப்பர் கந்தரலங்காரத்தில் "முத் தமிழால் வைதாரையும் அங்கு வாழ வைப்போன்" என்றும், தெய்வத் திருப்புகழில் "இனிதான முத்தமிழை ஆயும் வரிசைக்காரப் பெருமாள்" என்றும் முருகனுக்கும் தமிழுக்கும் உள்ள தொடர்பைப்பற்றி வெகு அழகாகக் கூறியுள்ளார். முருகனிடம் அழகுண்டு; தமிழிடம் இனிமையுண்டு. இவை

இரண்டும் ஒருங்கு சேருமிடத்து ஆனந்தமுண்டாகும். அந்த ஆனந்தத்தை அநுபவிக்கும் பாக்கியம் முருகன் திருவருளைப் பெற்ற நக்கீரர், அருணகிரிநாதர் போன்ற பெரியார்கள் பாடியருளிய தெய்வத்தமிழ்ப் பனுவல்களைத் தினந்தோறும் ஓதும் அன்பர்களுக்குத்தான் உண்டு. முருகனிடம் அன்பு பூண்டு ஒழுகும் அடியார்களுக்கு முருகன் எளிதில் காட்சியளித்து இம்மையிற் சுகத்தையும், மறுமையில் முத்திப்பேற்றையும் கொடுத்தருளுவான். ஆகவே மக்களாகிய ஒவ்வொருவரும் அனுதினமும் முருகப்பெருமானைத் தெய்வத்தமிழ்ப் பனுவல்களால் துதித்து, அவனுடைய அருளைப்பெற்று பேரானந்தப் பெருவாழ்வை அடைய முயலவேண்டியது அத்தியாவசியமாகும்.

---

## அர்ஜுனா! அர்ஜுனா!!

மாமழை பொழியுங்காற் பேரிடி இடிக்கக்கேட்ட நம் நாட்டு மக்கள் "அர்ஜுனா! அர்ஜுனா!!" என்று கூவியழைக்கக் கேட்டிருக்கலாம். பாண்டவர்களில் நடுவிலவனான அர்ஜுனன் இந்திரனின் மகனெனப் பிறப்புக்கூறப்படுமாகையால், அவன் பெயரைக் கூவியழைத்தால் அவன் உடனே தன் தந்தையாகிய இந்திரனிடங் கூறி, இடியினால் நேரும் தீங்கை விலக்குவான் என்று அதற்கு ஒரு காரணங் கற்பிக்கவுங் கேட்டிருக்கலாம். இஃதொரு வகையிற் சரியானதே.

"அர்ஜுனன்" என்ற வடசொற்கே மருது அல்லது மருதமரம் என்று பொருள். மருதமரங்கள் நிறைந்த இடைமருதூர் இதனாலேயே "மத்தியார்ஜுனம்" என்று வடமொழியில் அழைக்கப்படும். மருது நிறைந்த மருத நிலத்திற்குத் தமிழர் நிலப்பாகுபாட்டின்படி தலைவனாவான் இந்திரனே என்பது தொல்காப்பியத்திற் கண்டது. இந்திரன் மேகராசன்; அதாவது மேகங்களுக்குத் தலைவன்; இடியேறு அவன் கைப்படையாகும். ஆகவே அவனை "அர்ஜுனா!" அல்லது "மருதநாயகா!" என்று கூவியழைத்தால் அவன் பரிந்து வந்து உதவி செய்வான் என்பது நம்பிக்கை. இதனாலேயே இவ்வழக்கம் இந்நாட்டில் எழுந்ததுபோலும்!

—காழி. சிவ. கண்ணுசாமி B. A.

# ஆராய்ச்சிப் பகுதி : Research

## தனித்தமிழ் வளர்ச்சி

[சங்கரன்கோவில் திரு. பா. ரா. பரமசிவமுதலியார்]

தனித்தமிழ் வளர்ச்சி என்ற இக்கட்டுரையானது தமிழ் மொழியில் பிறமொழிக்கலப்பு பேணப்படுவது நன்று அன்று என்பது பற்றியும், எவ்வகையில் தனித்தமிழ் வளர்ச்சிக்குத் தமிழராகிய நாம் பாடுபடவேண்டுமென்பது பற்றியும் ஒருவாறு ஆராய முனைகின்றது.

நம்மவரில் ஒரு பகுதியார் 'தமிழ்மொழி ஆக்கமுற வேண்டுமாயின் பிறமொழிச் சொற்களையும் வேண்டு மளவு ஏற்றுக்கொண்டு வளம்பெறவேண்டும்' என்றும் உலகப்பொது மொழியாக வளர்ந்துவரும் ஆங்கில மொழியின் ஆக்க முறை நோக்குவார், பிறமொழிச் சொற்களைத் தடையின்றி எடுத்தாளும் ஒரு மொழிதான் செழித்துச் செம்மையாக வளர்ந் தோங்கும் என்பது விளங்குமென்றும் கூறுவர். இன்னோர் பரிமேலழகர், சிவஞானமுனிவர் உரைநடைகளில் வட மொழிச் சொற்கள் மிக்கிருப்பதைக் காட்டி, பிறமொழிச் சொற்கள் இடம் பெற்றால்தான் தமிழ்மொழி அழகுபெற்று மிளிரும் என்பதை நாட்டமுயலுவர். இன்னும் 'பழையன கழிதலும் புதியன புகுதலும், வழுவல கால வகையி னானே' என்ற இலக்கண விதியையும் தமக்குத் துணையாக்க முயலுவர். மொழியானது கருத்தைப் பிறர்க்கு அறிவிப்பதன்றி வேறு வகையில் பயன்தருவதில்லை; ஆதலின் பலமொழியாளர் பழக்கம் ஏற்படும்போது அம்மொழிச் சொற்கள் சில தமிழ் மொழியினும் சில தமிழ்மொழிச் சொற்கள் அம்மொழிகளி லும் கலந்து வழங்குதல் இயற்கை என்றும், அவ்வாறு கலத் தலைத் தடுத்தல் இயலாதென்றும் நிலையிடுவர். டிரெயின் (Train) கோர்ட்டு (Court) என்ற ஆங்கிலச் சொற்கள், தமிழ்பேசமட்டும் தெரிந்த பூரியார்க்கும் விளங்கி வரும்போது, அவற்றைப் புகைவண்டி, நீராவி வண்டி, இருப்புப்பாதை வண்டி என்றும், மன்றம், மன்று, நீதி மன்றம், நியாயகூடம் என்றும் மொழிபெயர்ப்பது தமிழ்மொழியில் சொல்லைப் பெருக்கல் அன்றி வேறு எப்பயனும் தருதற்கில்லை என்பதும் தெளிவு என்ப.

பெரியீர், தமிழறி பெரியீர்! தனக்கெனப் பகுதி அல்லது வேர்ச் சொற்கள் (Roots) அமையப்பெறாத ஆங்கிலமொழி வேர்ச் சொற்களையும், பிற சொற்களையும் மற்ற மொழிகளி லிருந்து ஏற்றுக்கோடல் பொருந்தும்; நம் தாய்மொழியாகிய தமிழ்மொழி பல பகுதிகளை யுடைத்தாயிருக்கின்றமையால் அன்றோ வண்டமிழ் என்று வழங்கப்படுகின்றது. அவ்வாறு எண்ணிறந்த வேர்ச்சொற்களைத் தனக்கெனப் பெற்ற தமிழ், பிறமொழிச் சொற்களைக் கடன்பெறல் நன்றாமா யென ஓர்க. பொருளில்லான் கடன்பெறல் வழக்கன்றி அஃதுடையான் அப்பொருளை எறிந்து—பயன் படுத்தாமல் கழித்து—வேறு பொருளைக் கடன்பெறல் யாண்டுமிலையே? ஆதலின் தமிழ் வளமுறுதற்கு ஆங்கிலமொழியைப் பின்பற்ற வேண்டுமென் றல் பொருந்தாது. இனி, பரிமேலழகர், சிவஞானமுனிவரார் முதலியோர் உரைநடையில் வடமொழிக்கலப்பு மிக்கிருப் பதாகக் கூறிப் பலமொழிக் கலப்பே வளமுறுத்தும் வழியாகும் என்பதனையும் சிறிது ஆராய்வாம். பரிமேலழகர், 'தான, சாம, பேத தண்டம்', என்ற வடமொழிகளை, 'கொடுத்தல், இன்சொற்கூறல், வேறுபடுத்தல், ஒறுத்தல்' என்று வரைந்தும் வடமொழியாளர் பகைவர்க்கம் என்ற அறுவகைக் குணங் களையும் காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதம் என்று மொழிந்தும் தனித்தமிழ் பேண வழிகாட்டுவ தாலும், இது போன்றே மாதவச் சிவஞான முனிவரரும் 'அநுபவம், அநுமானப் பிரமாணம்' என்பவற்றை அழுந்தி யறிதல், வழியளவை என்றுணர்த்தியும் அம்முறை நிறுவுவதா லும் தனித்தமிழ் பேணவேண்டுமென்பதை ஒருவாறு நிலை யிடத் தொடங்கியவர் அவர்களே ஆவர். இச்செய்தியை அவர் உரைகளை ஊன்றிப் படித்தறிக. ஆயின் அவர்கள் உரைநடை யில் வடசொல் மிக்கிருப்பதற்குக் காரணம் யாதோவெனில், வடமொழியும் தமிழும் பல்லாயிரமாண்டுகள் நெருங்கிய பழக் கம் பெற்றமையாலும், சமயச் சார்பு பெற்ற அறிஞர் பலரும் இருமொழி வல்லுநராக இருந்தமையாலும், இருமொழி கலந்த நடையே சமயப்பொருளைத் தெள்ளிதில் உணர்த்தும் கால மாக இருந்தமையாலும் அவர்கள் உரைநடை அவ்வாறமைந் தது. ஆயினும் அவர்கள் தமிழ்மொழியின் தூயதன்மை நிலவ வேண்டுமென்று விரும்பித் தனித்தமிழ்முறைவளர அடிகோலி னர் என்பதை மேற்கூறியதிலிருந்து அறிக. பல்வேறுமொழி பேசும் மக்கள் தமக்குள் நெருங்கிப் பழகும்போது, ஒரு மொழிச் சொல், அம்மொழியாளர் சைகை, செயல் முதலிய வற்றால் அதனை அறியாத பிறமொழியாளர்க்கு ஒருவகையில் பொருள் விளங்கிடச் செய்யும். அப்பிறமொழியாளர் தம்

மொழியோடு சேர்த்துத் தாமுணர்ந்த ஒருபுடைப் பொருளோடு அதனைப் பயன்படுத்துவர். இவ்விதமாகவே தமிழ் மக்களும் பிறமொழியாளரிடம் இருந்து சைகை, செயல் முதலியவற்றால் ஒருபுடைப் பொருள் தெரிந்த பிறமொழிச் சொற்களை ஆளுவர். அத்தகையவற்றைத் திசைச்சொல் என்பர் பெரியோர். இவ்விதமான திசைச்சொற்கள் அறிவு நிரம்பப் பெறாதாரிடமே முதலில் வெகுவிரைவில் பரவும். அப்படிப் பரவுவது தான் உலகியற்கை. ஆனால் சான்றோர் அத்தகைய சொற்களைத் தமது நூல்வழக்கில் வழங்குவதற்குமுன் அச்சொற்களின் வேர்ப்பொருளையும், அதற்குரிய மொழியில் அச்சொல் உணர்த்தும் பொருள்களையும் ஆய்ந்தறிந்து அவ்வாற்றல் அமைந்த தமிழ்ப்பகுதியால் சொல்லமைத்து வழங்குவர். அப்படிச்செய்வதால் தமிழ்மொழிமட்டும் தெரிந்த தமிழ் மக்கள் பொருள் ஆற்றலுடன் சேர்ந்த அறிவில் வளர்ந்து தம்மோடு பழகிய பிறருடைய நல்லியல்புகளையும் உணர்வர். இதற்கு ஓர் எடுத்துக்காட்டு தருகிறேன். Train (டிரெயின்) என்பதை ரயில் என்று தமிழர் வழங்கினாலும் 'வண்டித்தொடர்' என்று மொழிபெயர்ப்பதால் எழுத்துக் கூட்டிப்படிக்கத் தெரியாத் தமிழனும் பிழைபடப் பொருளை உணரான் என்பதை ஓர்க. இன்னும் கோர்ட்டு, ஆபீஸ் (Court, Office) முதலிய ஆங்கிலச் சொற்களுக்கு எல்லாம் கச்சேரி என்ற ஒரு சொல் வழங்கினாலும், நீதிமன்று அல்லது நியாயகூடம் என்றும் வேத்தவை, அல்லது வேத்தியல்நிலையம் என்றும் மொழிபெயர்ப்பின் அங்கங்கு நடக்கும் தொழில் வேறுபாடு நாளடைவில் எல்லா மக்களிடமும் விளங்க அதனால் மொழிவளர்ச்சி மிகும் என்பது அங்கை நெல்லிக்கனியன்றோ? செப்பு, கோப்பை, அச்சோ முதலிய திசைச் சொற்கள் நம்மிடை வழங்கினாலும், சொல்லு, குவளை, ஐயோ என்ற தமிழ்ச் சொற்களும் நிலை பெற்று வழங்கிவருகின்ற பெற்றியை நுணுகி உணர்க.

இன்னும் உலகியலில் மக்கள் பிறமொழியாளரிடைப் பழகும்போது மாறுபாடடைவது பழக்கத்தில் வராத சில சொற்கள் காலப்போக்கில் வீழ்ந்து ஒழியும் என்பதும், பழக்கத்தில் தோன்றும் புதுச்செயல், கருவி, எண்ணங்களை உணர்த்தும் புதுச்சொற்கள் முளைத்தெழும் என்பதும், அவற்றிற்கேற்ப இலக்கணமும் மாறும் என்பதும் உணர்த்துதற்கே. "பழையன கழிதலும் புதியன புகுதலும், வழுவல கால வகையினானே" என்ற விதி எழுந்தது இதனாலேயே. அரசு + அங்கம் என்ற புணர்ச்சி அரசங்கம் என்று சேரவேண்டியதிருக்க அரசாங்கம் எனப் புணர்ந்து நிலவுகிறது. இத்தகைய புணர்ச்சி இலக்கணப் பிழையல்ல என்று கண்டுகொள்ள இவ்விதி இடம்

தருமேயன்றித் தமிழ்ப் பகுதிகளை அழிக்கக்கூடிய திசைச் சொற்களை அப்படியே வழங்கவேண்டும் என்ற ஏற்பாட்டிற்கு அரண்செய்யாது. திசைச்சொல் என்றும், வடசொல் என்றும், வேறுபிரித்து இலக்கணவரையறை செய்திருப்பதாலும், நாம் மேலே கூறிய செய்தி உறுதிப்படும். இதனோடு கழிதலும் புகுதலும் எனத் தன்வினைகள் ஆண்டிருப்பதால் கழித்தலும் புகுத்தலும் செய்யக்கூடாது என்பது தேற்றம்.

இனி உலக வழக்கில் இடம்பெற்ற திசைச்சொற்களையே ஆண்டுகொண்டு தனித்தமிழ்ச்சொற்களைக் கொள்ளாமல் விட்டால் ஏற்படும் குற்றத்தையும் சிறிதுகாட்ட முயலுவேன்.

திசைச்சொற்கள் எந்தப்பொருளை உணர்த்த சைகை முதலியவற்றால் தமிழ்மக்களிடை வந்தனவோ, அப்பொருளை மட்டும் உணர்த்தும்; சிலசமயம் அதற்கில்லாத பொருளையும் உணர்த்தும். Hamilton Bridge என்பது அம்பட்டன் வாராவதி என்று வழங்கப்படுதல் இதற்குச் சான்று. இது போலவே, Shop, Compound, Gate (ஷாப், காம்பவுண்டு, கேட்) முதலிய ஆங்கிலச் சொற்கள் சில நேரங்களில் அவற்றின் உண்மைப் பொருளை இழந்து வழங்குதல் கண்டுகொள்க. இன்னும் மொழி பெயர்க்குப்போது வேர்ச்சொல்லை ஆராயாமல் மொழிபெயர்ப்பதால் பல கேடுண்டாம். Engine என்ற ஆங்கிலச்சொல் அதன் வேர்ப்பொருளோடு பொருந்த மொழிபெயர்க்கப்பட்டுப் பரவாமையல் Engineer, Engineering, Enginery என்ற ஆங்கிலச் சொற்களுக்கு தமிழ் மக்கள் ஏற்ற பொருளைத் தெரிய முடியவில்லை. இவை Engine—எழுச்சிப்பொறி, Engineer—எழுச்சிவேள், Engineering—எழுச்சிக்கலை, Enginery—எழுச்சிப்படை) என்று மொழிபெயர்த்து வழங்கினால் இவற்றின் சிறந்த பொருள் தமிழ்மக்களிடை நாளடைவில் நிலைபெறும். அதனால் மக்கள் ஆராய்ச்சியறிவிலும் பொருளை உற்றுணர்வதிலும் சிறந்து விளங்கி நலம் பெறுவர். இவ்வாறன்றிச் சொற்களின் சிறப்பியல்களை உணர்த்தாத திசைச்சொற்களால் அறிவு வளர்ச்சியும் தடைப்படும் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு கண்டு கொள்க. அவதாரம் என்ற வடசொல் கீழ் இறங்குதல் என்ற பொருளுளது. ஒரு பெரியார் கீழ் இறங்கு நிலைஎடுத்தார் என்றால் தேவர், முனிவர் ஆக விளங்கிய ஒரு அருளாளர், மற்றவர் படும் இன்னல் கண்டு இரக்கமுற்று, அவரைத் திருத்துவான் வேண்டி, கீழ் நிலையாகிய மனிதவுடலை ஏற்றார் என்று விளங்கும்; அதனால் அவர் சொல்லுவன, நடந்து காட்டுவன மக்கள் பின்பற்றக் கூடியவை என்று மனதிற்படும். அதனால் மக்கள்

அவரைப் பின்பற்றுவர். ஆனால் அச் சொல்லின் பொருள் மனதிற் படாமையால் அவதாரம் செய்த பெரியார் சொல்லுவன, நடந்து காட்டுவன எல்லாராலும் பின்பற்றக் கூடியன அல்ல என்று நினைக்கப்படுகின்றது. அதனால் பெரியோரைப் போற்றிப் புகழ்வதில் மட்டும் தமிழ் மக்கள் முனைகின்றனர்; பேணி வழிபட்டு ஒழுகுவோர் அரியராகின்றனர். ஆதலின் திசைச் சொற்கள் ஒருவகையில் அறிவு வளர்ச்சிக்கும் தடை செய்வதாகும் என்பதறிக. ஆதலின் அறிஞர் தனித்தமிழ்முறை பேண முற்படுவது போற்றத்தக்கதே.

இதுகாறும் கூறியதிலிருந்து தனித்தமிழ் வளர்ச்சிக்குப் பாடுபடுவது ஆன்றோர் காட்டிய வழி என்றும், ஆனால் வேர்ச்சொல்லறிந்தே மொழிபெயர்க்க வேண்டுமென்றும், அதனால் தான் தமிழ்மக்கள் அறிவு நிரம்பும் என்றும், திசைச் சொற்களைப் பேச்சுமுறையில் வழங்குவதும் குற்றமன்று என்றும் ஒருவாறு உணரலாம்.

---

## பனையும் பழந்தமிழ் நூல்களும் பிறவும்

[மூளாய் சைவப்பிரகாச வித்தியாசாலைத் தலைமை ஆசிரியர்
பண்டிதர் ஸ்ரீமத் கா. போ. இரத்தினம் அவர்கள்.]

மண்ணுலகின் கற்பகதருவெனப் புகழப்பெறும் பனையைப் பற்றியும் அதன் அளவில்லாத பிரயோசனங்களைப் பற்றியும் யாவரும் நன்கறிவர். உண்ண உணவையும் படுக்கப் பாயையும், பருக நீரையும், எழுத ஓலையையும், பிடிக்கக் குடையையும், இன்னும் பலவற்றையும் தந்து நந்தமக்கின்றியமையாத தொன்றாக விளங்குவது அஃதே. பெண்ணை, ஏடகம், கரும்புறம், தாலம், தாளி நீலம், புல், புற்பதி, புற்றாளி, போந்து, போந்தை முதலிய சொற்களெல்லாம் பனையைக் குறிப்பனவே. ஆரிய மொழியில் தால (**तालः**) எனவும், சிங்களத்தில் தால் எனவும், ஆங்கிலத்தில் 'பல்மேரு பாம்' (Palmyra Palm) எனவும், மலையாளத்தில் 'றுல்' எனவும், தெலுங்கிலும் கன்னடத்திலும் 'தாலி' எனவும் பனை அழைக்கப்படுகிறது. பனையைப் பற்றிப் பழந்தமிழ் நூல்களிற் காணப்படும் சிறந்த குறிப்புகளையும் பிறவற்றையும் எடுத்துக்காட்டலே இக்கட்டுரையின் நோக்கமென்க.

நம் முன்னோர் ஆறறிவுடைய மக்களையே ஆண் பெண்பாற்படுத்தி வழங்கியுள்ளர். சிறுபான்மை ஐந்தறிவும் அதிற்குறைந்த

அறிவுமுடைய உயிர்களையும் அவ்வாறு பாற்படுத்தியுளர். ஓரறிவுயிர்களாகிய தாவரங்களுள் பனையை மாத்திரமே ஆண், பெண் பாற்படுத்தியிருக்கின்றனர். ஆண் பனை, பெண் பனை யென்றல் பெருவழக்கு. ஆண் கமுகு, பெண் கமுகு, ஆண் தென்னை, பெண் தென்னை எனக் கூறுவாரு முண்டோ? இப்பாற்பகுப்பு பனையின் பெருமையை நன்கு விளக்குவ தொன்றன்றே!

சைவமும் தமிழும் தழைத்தினி தோங்கவும், பரசமய விருணீங்கவும், திருவவதாரஞ் செய்தருளிய திருஞான சம்பந்தமூர்த்திநாயனாருடைய அற்புதச் செயல்கள் பலவாகும். அவற்றுள், திருவோத்தூரில் ஓர் சிவனடியார் வைத்த பனைகளெல்லாம் ஆண்பனைகளாக, அவற்றைப் பெண் பனைகளாக்கினமையும் ஒன்றாகும். சம்பந்த சுவாமிகளின் அற்புதச் செயலோடு சம்பந்தப்பட்ட பனையின் சிறப்பை யார்தான் கூறமுடியும்? 'திருப்பனையூரில் விருப்பனாகியும்' எனும் மணிவாசகர் கூற்றால் பனையென்னும் பெயரையுடைய ஓரூரும் உண்டென்பது பெறப்படுகிறது. அனுட நட்சத்திரத்தைப் பனையெனும் பெயராலுங் குறிப்பர். பனைமீன் என ஓர் வகைப் பெரிய மீனுக்குப் பெயருண்டு. பலதேவரும் வீட்டுமரும் பனையை யெழுதிய கொடியையுடைவர்கள். 'கடல் வளர்புரிவளை புரையுமேனி, யடல்வெங் நாஞ்சில் பனைக் கொடியோன்' என்பது புறநானூறு.

"காவோலைவிழக் குருத்தோலை நகைக்கும்' என்று ஒரு பழமொழியுண்டு. அரும்பொருளை விளக்கும் இப்பழமொழியிலுள்ள ஓலைகள் பனையோலைகளே.

—"பனையின்மேல்
வற்றிய வோலை கலகலக்கும் எஞ்ஞான்றும்
பச்சோலைக் கில்லை ஒலி"

எனும் நாலடியார் அடிகளை அறியாதார் யாவர்?

இற்றை ஞான்றுள்ள தமிழ் நூல்களிலெல்லாம் காலத்தால் முற்பட்டதென யாவராலும் போற்றப்படும் தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் காணப்படும்

"புறக் காழனவே புல்லென மொழிப
அகக் காழனவே மரமென மொழிப"

எனுஞ் சூத்திரம் பனையைப் புல்லினத்தில் சேர்க்கிறது.

"இலையே தளிரே முறியே தோடே
சினையே குழையே பூவே யரும்பே

*நனையுள் ளுறுத்த வனையவை யெல்லா*
*மரனொடு வரூஉங் கிளவி யென்ப"*

எனும் சூத்திரம் புல்லினங்களின் உறுப்புக்களின் பெயரைக் கூறுகிறது. இவ்வுறுப்புக்கள் பனைக்குமுரியனவெனக் கூறல்வேண்டிய தின்று.

*"பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும்*
*நினையுங் காலை அம்மொடு சிவணும்"*

எனும் தொல்காப்பிய எழுத்ததிகாரச் சூத்திர அடிகள் பனங்காய், பனம்பழம், பனஞ்செதிள், பனந்தோல் முதலிய சொற்களின் புணர்ச்சியைக் கூறுகின்றன.

*"பனையின் முன்னரட்டு வருகாலை*
*நிலையின் றாகு மைய னுயிரே*
*யாகாரம் வருத லாவயி னான"*

எனுஞ் சூத்திரம் பனாட்டு எனுஞ் சொல்லின் புணர்ச்சியைக் கூறுகின்றது. பனை + அட்டு = பனாட்டு. பனாட்டு என்பதன் பொருள் பனையின் தீங்கட்டி என்பது. பனாட்டென்னுஞ் சொல் அக்காலத்துப் பெருவழக்கா யிருந்தமைக்கு இச்சூத்திரம் பெரியதொரு சான்றாகும். சான்றாகவே பனாட்டு அக்காலத்து உண்டாக்கப்பெற்று யாவராலும் போற்றி உண்ணப்பட்ட தென்பது வெள்ளிடை. மேலைத்தேச நாகரிகத்தி லீடுபட்டுச் செல்லும் நம்மவர்கள் பனாட்டைக் கைநெகிழ விட்டுவிட்டார்கள். இன்னுஞ் சில காலத்தில் அச்சொல்லும் வழக்கிறந்து விடுமோ என்றெண்ண வேண்டியிருக்கிறது. தொல்காப்பியர் காலத்திலேயே யன்றி நன்னூலாசிரியர் காலத்திலும் அச்சொல் பெருவழக்கி லிருந்ததற்கு

*"பனைமுன் கொடிவரின் மிகலும் வலிவரின்*
*ஐபோ யம்முந் திரள்வரி னுறழ்வும்*
*அட்டுறினை கெட்டந் நீள்வுமாம் வேற்றுமை"*

எனும் நன்னூற் சூத்திரம் சான்றாகும்.

பனைக்கொடி எனுஞ் சொல்லின் புணர்ச்சியை உணர்த்தவே,

*"கொடிமுன் வரினே யையவ ணிற்பக்*
*கடிநிலை யின்றே வல்லெழுத்து மிகுதி"*

எனுஞ் சூத்திரம் தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில் எழுந்தது. பனைக்கொடி என்பது பனையை எழுதின கொடியை.

நன்னூலில் ஆசிரியராகத் தகாதவர்களை மடற்பனைக்கு ஒப்பிடப்பட்டிருக்கிறது.

"தானே தரக்கொளி னன்றித் தன்பால்
மேவிக் கொளக் கொடாவிடத்தது மடற்பனை"

இச்சூத்திரம் மடற்பனையைப் பற்றி வர்ணிக்கின்றது. மடற்பனையாவது ஏறிக் கொள்ளமுடியாமல் மடல்கள் நிறைந்த பனை.

முடியுடை மூவேந்தர்களில் சேர அரசர்கள் பனைமாலையைத் தங்கள் குலத்தாருக்குரிய மாலையாகக் கொண்டிருந்தார்கள். "இரும்பனை வெண்டோடு மிலைந்தோனல்லன்" என்பது புறநானூறு. "போந்தைக் கண்ணி நின்னூங்கணோர் மரபில்" என்பது சிலப்பதிகாரம். பனைமாலையாவது பனங்குருத்தைத் தோடுதோடாக நறுக்கித் தொடுக்கப்படும் மாலை. புறப்பொருள் வெண்பா மாலை எனும் நூலில் போந்தை எனும் ஒரு துறையுண்டு. போந்தையாவது:—

"கலவா மன்னர் கண்ணுறு ஞாட்பிற்
புலவேல் வானவன் பூப்புகழ்ந் தன்று"

இ-ள்:—பொருந்தாத அரசர்கள் கிட்டினபோரில் புலால் நாறும் வேலினையுடைய சேரன் சூடும் பூவைப் (பனந்தோடு) புகழ்ந்தது. எ-று.

---

# அழிசிகுடி

(நற்றிணை—கசு௰)

[சீகாழி திரு. ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளை அவர்கள்]

பழங்காலத்தில் தமிழகத்தில் கொள்ளிட நதிக்கு வடபாலுள்ள தேசம் அருவா, அருவா வடதலை என இரண்டு பிரிவாகப் பிரிந்திருந்தது. அருவா நாட்டினிடையே வடவெள்ளாறும் தென் பெண்ணையும், அருவா வடதலையினிடையே பாலாறும் ஓடுகின்றன. இந்நாடுகளில் அருவாளர் என்னும் பெருங்குடிகள் வசித்து வந்தனர். இவர்களைக் கரிகாற்பெருவளத்தான் வென்று காஞ்சிபுரத்தில் அதிராஜ்யமொன்றை தாபித்ததாகத் தமிழ் நூல்களிற் காண்கிறோம். இவ்வருவாளருக்குக் காவல் மரம் ஆர் (ஆத்தி) ஆகும். சோழவரசர் தங்களுக்கு உரிய ஆத்திமாலையோடு இவ்வருவாளரது காவல் மரமாகிய ஆத்தியையும் வென்று அதற்கு அறிகுறியாக ஆரங்கண்ணிச் சோழர் எனச் சிறப்புப்பெயர் பெற்றனர். ஆதலின், இந்த நாடு ஆர்க்காடு என்னப்பட்டது.

இத்தேசத்தில் தில்லைவனம் முதல் ஆத்திவனம் வரையில் ஆறு காடுகள் முனிவர்களுக்கு வாசஸ்தலமாக இருந்தபடியால் இவ் வார்க்காட்டு நாட்டை ஆறுகாடெனவும் வழங்கி வந்தார்கள். மகா மொகலாயர் தென்னாட்டைக் கைப்பற்றியபோது இந் நாட்டை ஒரு சுபாவாக்கி அதற்கு ஆர்க்காட்டைத் தலை நகராக அமைத்து ஒரு நவாபின் ஆட்சிக் குள்ளாக்கினர். இங்ஙனம், கி.பி. 1799 வரையில் இந்நாட்டின் பெரும்பாகம் அவர்கள் வசமிருந்து பின்னர் ஆங்கிலேயர் ஆட்சிக்குள்ளா னது. இந்நாட்டின் மலையரண், காட்டரண், நீரரண் படையரண் இவற்றை நோக்குமிடத்து அதிபூர்வகாலத்தில் வடபுலத் தரசர் தென்னாட்டில் பிரவேசியாதிருப்பதற்கு அவை முக்கிய காரணங்களாயிருந்தனவென்பது விசிதமாகும். வட வெள் ளாற்றின் முகத்துவாரத்தில் பறங்கிப்பேட்டை (வருணபுரி, பிராங்கிப்பெட், பெரைங்கைப்பெட் மஹ்மூது பந்தர், போர்டோ நோவோ) என்னும் துறைமுகம் கிழக்கிந்தி யத் தீவுகளோடும் சோனகம், யவனம் முதலிய மேல் நாடுகளோடும் கடல்வழியாகப் பூர்வத்திலும், போர்த்து கல், டென்மார்க், உலாந்து, பிரிடானியா இவைகளோடு பிற்காலத்திலும் வாணிபம் செய்து வந்தது என்பதை பெரிபுளூஸ், டாலமி, பிளினி என்பவர்கள் எழுதிய நூல் களைக்கொண்டும், தென்னிந்திய சரித்திரத்தைக் கொண் டும், யானைகள் (மஹ்மூது) இறங்கி வருவதற்கேற்ற துறை முகமாக (பந்தர்) இருந்தது என்னும் திருத்தொண்டர் புராணத்தைக்கொண்டும் அறியலாம். இந் நகரத்தின் செல்வ நிலையைக் கருதி ராஜபுத்திரர் படையெழுச்சியும் ("ஆனந்த ரெங்கப் பிள்ளை' தினசரி), ஹைதர் அலி கலாபமும், சர் அயர் கூட் ஹைதரை மேட்டுப்பாளையத்தில் வென்ற வெற்றியும் நிகழ்ந்தன. இத் துறைமுகத்திற்கு மேற்கே 32 மைலில் விருத்தாசலம் என்னும் தலமும் வடக்கே 7 மைலில் சோபுரம் (நொச்சிக்காடு, தியாகவல்லி) என்னும் தலமும் உள் ளன. இந்தச் சோபுரம், கடற்கரையில் புன்னை, அடம்பு, இராவணன் மீசை இவைகளுக்கிடையே மணற் குன்றாகிய கோடுகளாலும் கழிகளாகிய கோட்டாறுகளாலும் மறைக் கப்பட்டிருந்து 130 வருடங்களுக்குமுன் சங்கரநாய்க்கர் சங்கரமூர்த்திப்பிள்ளை இவர்களால், வருணபுரிக் கோபுரத்தின் கண் மாலையில் வசித்துக் காலையில் அங்குச் சென்றுவந்த இரண்டு நாரைகளின் உதவியால் காணப்பட்டபின், புதிய திருப்பணி நடந்தது. பறங்கிப்பேட்டைக்கு 4 மைலுக்கு அப் பால் வட வெள்ளாற்றின் தென் கரையில் கணம்புல்ல நாய னார் அவதரித்த வேளூர் இருக்கிறது. அவ்விடத்தில் வெள்

ளாறு முட்டமாக வருதலால் இவ்வேளூரை முட்ட வேளூர் (முட்ளூர்) என்பர். இதற்கு மேற்கே ஏழு மைல் தூரத்தில் வெள்ளாற்றின் வடகரையில் விருத்தாசலம் ரஸ்தாவில் சேத்தியார் தோப்பு அணைக்கட்டுக்குக் கிழக்கே அழிசிகுடி யென்னும் பழைய ஊர் அமர்ந்திருக்கிறது. இதில் பழைய பலமான மண் கோட்டையும் அதைச் சுற்றி நொச்சி வேலியும் இருந்தனவாம். வீரணக்குடிமுதல் புதுச்சத்திரம் வரையில் வேடரும் வில்லியரும் பழைய அரசர்களுக்குப் படையாளர்களாக அமர்ந்திருந்தனர். இவர்களின் சந்ததியார் இன்னும் இங்கு மிகுதியாகக் காணப்படுகின்றனர். அழிசிகுடி என்பது கந்தன் குடி என்பது போல அழிசி என்னும் குறுநில மன்னர் வசிக்கும் இடம் எனப் பொருள்படும்; கிள்ளிகுடி என்பது போல கிள்ளியினது குடிகள் வசிக்கும் ஊர் எனினும் அமையும். இவ்வூரைத் தமது ஆண்மையால் வடபுலத்தரசர் ஆர்க்காட்டின் உதவியைக் கொண்டு தென்னாட்டில் புகாதபடி பாதுகாத்து வந்தவர் இவ்வழிசி யென்பார். இவர் ஆர்க்காட்டில் பெரும்போ ரொன்று நிகழ்த்தினார். இப்பெரும்போரின் விவரமே நற்றிணை ௧௯௰—வது செய்யுளில் குறிக்கப்பட்டிருக்கிறது. இச் செய்யுள் இப்போது நமக்குக் கிடைத்திருக்கும் பழந்தமிழ்ப் பாடல்களில் முற்பட்டது. அதிராச்சியங்கள் இப்பகுதியில் ஏற்படுவதற்கு முன்னரே இந்த அழிசியினது கண ராச்சியம் (வேள் நாடு) கி. மு. 50-ம் வருடத்திலிருந்ததென்றும், இவருக்குப் பின் உறையூரில் வெளியன் தித்தன் முதலிய வேளிரும், இவர்களுக்குப் பின் முடித்தலை மன்னரும் ஆட்சி புரிந்திருந்தனரென்றும் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். இங்குக் காட்டப்பட்ட அழிசிகுடியே பண்டைத் தமிழ் நூலில் கூறப்பட்ட அழிசிகுடி என யாவரும் தேர்தல் வேண்டும்.



**இவ்வாண்டுத் திருவள்ளுவர் திருநாள் வருகிற 25-5-37 செவ்வாய்க்கிழமையாகும். தமிழ் மக்கள் சிறப்பாக அதனைக் கொண்டாடுதல் வேண்டும்.**

# அறிவியற் பகுதி - Science

## தமிழ் எழுத்துக்களின் நுண்மை விளக்கம்

[பா. வே. மாணிக்க நாயக்கர்—க. ப. சந்தோஷம் B. A, L. T.,]

(முன் சககக-ஆம் பக்கத்தொடர்ச்சி)

உயிர்கள் எடுக்கின்ற பல பிறப்புக்கள் அல்லது உடம்புகள் திரிமலகோசமென்றும், மாயையின் வடிவமென்றுங் கூறப்படுகின்றன. இங்ஙனமாயினும், தேவர், நரர், மிருகம், பக்ஷி, கீடம் என்ற பல பிறப்புக்களில் மக்களுருவமே எல்லாவற்றினும், வானோர் வடிவம் பெறுவதினும் சிறந்ததாகக் கருதப்படுகின்றது. தாயுமானுர் பாடல்களில் பின்வருவது மேற்கூறியதற் குதாரணமாகும்.

> "எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதா
> னியாதினும் மரிதரிது காண்
> இப்பிறவி தப்பினு லெப்பிறவி வாய்க்குமோ
> வேது வருமோ வறிகிலேன்
> கண்ணகநிலத்துநா னுள்ளபொழுதே யருட்
> ககனவட் டத்தி னின்று
> காலூன்றி நின்றுபொழி யானந்த முகிலொடு
> கலந்து மதியவச முறவே
> பண்ணுவது நன்மை.................."

மக்கட்பிறப்பு எல்லாவற்றினும் சிறந்ததாய் எண்ணப்படுவதற்குக் காரணம் தேவவடிவம் நிலையற்ற வின்பத்தை நுகர்வதற்கே ஏற்ற ஒரு கருவி என்பதும், விலங்கு, பறவை, புழுவினுருவங்கள் கடவுளை யறிதலாகிய ஞானம் பெறுதவை என்பதுந்தான். மக்கள் வடிவந்தான் உள்ளிருக்கும் உயிர் வீடுபெறத் துணைசெய்யும் வடிவமாம். உயிர்கள் தாங்குகின்ற வடிவங்கள் மொழிகளில் வழுங்குகின்ற ஒற்றெழுத்துக்களை யொத்திருக்கின்றன. திரிமல கோசங்களில் மக்களுடம்பு சிறந்து விளங்குவதுபோல் மந்திரங்களில் வகர யகர மெய்கள் மற்ற மெய்களினின்றும் தனித்து நிற்கின்றன. உயிர் வீடுபெறக் கருதிக் கூறப்படும் மந்திரங்களில் இவ்விரண்டெழுத்துக்களும்—ஜீவாத்மாவைக் குறிக்கும் யகரமும் அதற்குத் துணையாய் நிற்கும் கடவுளருளைக் காட்டும் வகரமும்—தனிச்சிறப்புடையனவாய் மிளிர்கின்றன. ஈண்டு இவ்விரண்டெழுத்துக்களும் மொழியிலக்கணத்தில் உடம்படு மெய்யென்ற வகையில் எத்தொழி லியற்றுகின்றனவோ

அதற்கிணையான தொழிலை மந்திரங்களிலு மியற்றுகின்றன வென்பதைக் காட்டுவதவசியமாகின்றது.

இறைவனதருளின் பெருமை 'திருவருட்பயன்' என்ற நூலில் பின்வருமாறு விளக்கப்பட்டுளது.

"அருளிற் பெரிய தகிலத்து வேண்டும்
பொருளிற் றலையிலது போல்"

ஒருவன் கருதிய பொருளினும் பெரிது உலகில் வேறில்லா ததுபோல் உயிர்கட் கிறைவன தருளைக்காட்டிலும் பெரிது வேறில்லை.

யகரத்தின் பொருள் ஜீவாத்மாவென்பது மேற்குறித்த நூலின் மற்றொரு சூத்திரத்திற் கூறப்படுகின்றது.

"விரியமனமே வியவ்வை மீளவிடா சித்தம்
பெரியவினை தீரப் பெறும்"

இதனுரை:—

"மகார நகாரமாகிய மலமுந் திரோதமும் மிகவும் மிறு கப் புணர்ந்து யகாரமாகிய உயிர்களைத் திரும்பவிடா; அவ் வுயிர்கள் தம்பெரிய பிணியாகிய மலவிருள் தீருங்கால் சிகார மாகிய சிவத்தினை யடையும்."

வகரத்தின் பொருள் இறைவனதருளென்பதைத் திரு வருட்பய'னின் மற்றொரு செய்யுள் கூறுகின்றது.

"வாசி யருளியதை வாழ்விக்கு மற்றதுவே
யாசி லுருவமுமா மங்கு"

உரை:—

வகாரமாகிய அருள் சிகாரமாகிய சிவத்தினைக்காட்டி, யகாரமாகிய உயிரினை வீட்டின்பத்திலே இருத்தும். அன்றி யும், அவ்வருளே யந்தச் சிவத்திற்குக் குற்றந் தீர்ந்த (திரு மேனியா யிருப்பது.

இவற்றிலிருந்து ஓ நமசிவய என்ற பஞ்சாட்சரத்தில் யகர வகரங்களாகிய இரண்டெழுத்துக்களும் செய்கின்ற தொழில் பரமாத்மாவின் முன்னிலையில் ஜீவாத்மாவிற்கு வீடளிப்பது என்பது புலனும். நிலையுயிர் பரமாத்மாவையும் வருமுயிர் ஜீவாத்மாவையுங் குறிக்கும்.

நச்சினர்க்கினியரால் மேற்கோளாக எடுத்துக்காட்டப் பட்ட இரண்டு சூத்திரங்களில் உடம்படுமெய் இத்தன்மைத் தென்று வரையறுக்கப்படுகின்றது. அவையாவன:—

"உடம்படு மெய்யே யகார வகார
முயிர்முதன் மொழிவரூஉங் காலை யான"

"இறுதியு முதலு முயிர்நிலை வரினே
யுறுமென மொழிப வுடம்படு மெய்யே"

'திருவருட் பய'னென்பது அண்மையில் தோன்றிய ஒருநூல். தென்னிந்தியாவில் சமஸ்கிருத மொழியின் செல்வாக்கு நன்கு நிலைபெற்றபின் இந்நூல் எழுதப்பட்டது. ஆதலின், தொல்காப்பியத்திற்கு முற்பட்ட ஓர் இலக்கண நூலிலிருந்து தாமெடுத்துரைப்பதாக நச்சினார்க்கினியர் கூறும் மேற்கூறிய விரண்டு சூத்திரங்களிலும் யகர வகரங்களுக்கு ஈண்டு நாம் கண்டபொருள் பொதிந்து கிடப்பது கருதத்தக்கது. இவ் விரண்டெழுத்துக்களும் இலக்கணவகையி லியற்றுந் தொழில் மந்திரவகையி லிவை இயற்றுந்தொழிலுடன் ஒன்றி நிற்பது ஒரு விந்தையாகுமெனின், (வியத்தற்குரித்தெனின்) ஈண்டு நாம் கண்ட உண்மைகள் வெளிப்படும் வண்ணம் தமிழ்மொழி அமைக்கப்பட்டிருப்பது அதனினும் விந்தையாம்.

வகரத்தின் வடிவத்தை ஆராய்வோமாயின் மந்திர முறையில் அதில் விளங்குமுண்மை வெளிப்படும். தலைகீழாய் நிறுத்திய மகரங்கீழும் உகரம்மேலும் பொருந்த வமைக்கப் பெற்ற அகரவெழுத்தினின்றும் மகரத்தின் தலையும் வாலும் வெட்டி அகற்றப்படுமாயின், மிகுந்து நிற்பது வகரமாகும். 'ஐந்து அகரங்களிலிருந்து பஞ்சாட்சரம் பிறக்கும் வகையைக் காட்டிய படத்துள் ஐந்தாவது அகரத்தின் வடிவத்தை நோக்க இது விளங்கும். இதை உளத்திற்கொண்டு வகர வடிவத்தை நோக்குவோமாயின், அது சிவத்தைக் குறிக்கும் லிங்கவடிவினதாகிய நெடுங்கோடு முழுமையையும், சத்தியைக் குறிக்கும் உகரத்தையுந் தன்னுளடக்கிச் சத்தியினின்றும் பிரிக்கொணாத மலத்தைக் குறிக்கின்ற மகரத்தின் ஒரு சிறு பகுதியையும் மட்டும் உடையதாய் நிற்கின்றது. மந்திர நூற்படி, மகரத்தாற் குறிக்கப்படுகின்ற மும்மலங்களினின்றும் ஆன்மாவை விடுவிக்கும் இறைவனதருள் வகரமாகும். வகர வடிவத்தில் மகரத்தின் தலையும் வாலும் நீங்கி சிவம் சக்தியாகிய இரண்டின் வடிவங்களும் பொருந்திக் கிடக்கின்றன. ஒகர அகரங்களின் வடிவத்தை முறையே தக்ஷிணாமூர்த்தத்துடனும், ஊர்த்தவ நடனத்துடனும் ஒற்றுமை செய்து

காட்டுங்கால் இவ்விரண்டு மூர்த்தங்களிலும் மலத்தினின்று நீங்கிய பகுதிகளே வகரவடிவந்திற் குரியனவாவதைப் பார்ப்போம்.

இலக்கணத்தில் வெளிப்படும் மற்றொரு மந்திரப் பகுதியை யுரைப்போம். மந்திரங்களில் ம், ன், ண் என்ற எழுத்துக்கள் தோன்றுகின்றன. அகரத்திலிருந்து பிறவெழுத்துக்களைத் தோற்றுவிக்கும் முறையில் மகரத்தை யுண்டாக்குவதற்கு அகரத்தின் கீழ்ப்பகுதியிலிருக்கும் வளைவு ஒன்று வேண்டப்படுகின்றது. னகரத்திற்கு இரண்டு வளைவுகளும், ணகரத்திற்கு மூன்று வளைவுகளும் வேண்டப்படுகின்றன. (மூல மந்திரங்களை விளக்கும் பகுதியை நோக்க) பொதுவாக மந்திரமுறையில் மகரம் உயிர்களைப் பிணிக்கும் மலத்தைக் காட்டி நிற்கின்றது. ஆனால், னகர ணகரங்களோடு ஒப்பிடுங்கால் மகரம் ஒரே மலத்தைக் காட்டுவதாகி விஞ்ஞானகலரைக் குறிக்கும். னகரம் இருமலங்களைக் காட்டி, பிரளயாகலரைக் குறிக்கும். ணகரம் மும்மலங்களைக் காட்டி சகலரைக் குறிக்கும். இங்ஙனம் மந்திர முறையில் மலத்தைக் குறிக்குமளவில் மகரம் னகரத்தைவிடத் தாழ்ந்தது. மற்றும், வகரமாகிய அருள் வர மகரமாகிய மலம் மறையுமென்ற மந்திர விதியுமுளது.

இனி, இலக்கண வகையில் ஈண்டுக் கண்ட உண்மைகள் வெளிப்படுந் தன்மையைக் காண்போம். தொல்காப்பிய மொழிமரபில்,

'னகாரை முன்னர் மகாரங் குறுகும்'

என்பதொரு சூத்திரம். னகரத்தின் பின்வந்த மகரங் குறுகுமென்ப திதன் பொருள். இதற்குரை எழுதிய நச்சினார்க்கினியர், "இனித் தன்னின முடித்தலென்பதனான் ணகாரவொற்றின் முன்னும் மகாரம் குறுகுதல் கொள்க" என்றார்

"வகார மிசையும் மகாரங் குறுகும்"

இது புள்ளி மயங்கியலிலுள்ள தொல்காப்பிய சூத்திரம். வகரத்திற்கு முன் மகாரங் குறுகுமென்பது இதன்பொருள். பவணந்தியின் நன்னூலில் இவ்விரண்டு சூத்திரங்களும் ஒன்றாக்கப் பெற்றுப் பின்வருமாறு கூறப்படுகின்றன:—

"ணனமுன்னும் வஃகான் மிசையும் மக்குறுகும்"

இங்ஙனம், ம, ன, ண, வ எனுமெழுத்துக்களைப் பற்றிய வளவில் மந்திரவிதியும் இலக்கணவிதியும் ஒன்றி நிற்பதை எளிதிற் காண்கின்றோம்.

(தொடரும்)




## சர் ஐசக் நியூட்டன்
## (Sir Isaac Newton) (1642—1727)

[திரு. என். குழந்தைவேலன் அவர்கள், B. A.]

சர் ஐசக் நியூட்டன் என்னும் பேரறிஞர் ஆங்கில நாட்டில் லிங்கன்ஷயர் (Lincolnshire) என்னுமிடத்தில் 1642-ஆம் ஆண்டில் பிறந்தார். இவர் நிலத்தின் கவர்ச்சியையும் (gravitation), அதன் நுட்பங்களையும் ஆராய்ந்து அறிந்தவர். இவர் ஒளியின் தன்மைகளையும் நிறங்களின் தத்துவங்களையும் உலகிற்கு உணர்த்தியவர். இவர் கணித நூல் ஆராய்ச்சியில் தமக்கு ஒப்பார் எவருமின்றித் திகழ்ந்தவர் ஆகலின் இக்காலத்திலும் கணக்கில் வல்லவர்களை நியூட்டன் என்னும் புனைவுப் பெயரால் அழைப்பது வழக்கமாக இருந்து வருகின்றது.

நியூட்டனுக்கு மூன்று ஆண்டுகள் நிரம்புமுன் தந்தையார் இறந்துபடவே இவர்தம் அன்னையார் மறுமணம் செய்துகொண்டு வேறு இல்லத்திற்குப் போய்விட்டனர். இதனால் நியூட்டன் தம்முடைய பாட்டியின் பாதுகாப்பில் இருக்கும்படி நேர்ந்தது. இவரது தாய்மாமன் அயிஸ்கோ (Ayscough) என்பார் கிறித்துவமத குருவாக வேலைபார்த்து வந்தார். இவர் நியூட்டனிடம் மிகுந்த அன்பு பாராட்டி வந்தார். நியூட்டன் கிரந்தாம் (Grantham) என்னும் இடத்திலுள்ள பள்ளிக்கூடத்தில் கல்வி பயின்று வந்தார். சில ஆண்டுகள் கழித்து இவருடைய சிறிய தந்தையும் காலஞ்சென்று விட்டதால், இவர் தம் அன்னையார் மற்றும் மூன்று குழந்தைகளுடன் வீடு திரும்பினர். நியூட்டன் அப்பிள்ளைகளிடம் மிகுந்த அன்புடன் பழகிவந்தார்.

நியூட்டன் இளமையிலேயே தம் ஊருக்கு அருகிலிருந்த ஒரு காற்றுப் பொறியை (Wind-mill) மிகவும் நுட்பமாய் ஆராய்ந்து அதைப்போல் சிறியதாகத் தாமே ஒன்று அமைத்தார். இவர் அதனுள் ஓர் எலியை அடைத்து அதன் உருளையைச் சுழலும்படி செய்தார். இவர் ஒரு பெரிய நீர்க்கடிகாரம் (Water clock) செய்தார். அது நான்கடி உயரம் இருந்தது. கடிகாரத்தின் முள்ளுடன் ஒரு சிறிய மரப் பலகை இணைக்கப்பட்டிருந்தது. மரப்பலகையின்மேல் நீர் சொட்டுவதால் அப்பலகை நகர்ந்து கடிகாரத்தின் முள் திருப்பப்பட்டது. இதனைக் கண்டோர் யாவரும் நியூட்டனுடைய அறிவு நுட்பத்தை வியந்து பாராட்டினர். நியூட்டன்

தம்முடைய நண்பர்களுக்கு மெழுகினல் விளக்குகள் செய்து கொடுத்து அவர்களை மகிழ்விப்பார். இவர் சில வேளைகளில் காற்றாடிகள் செய்து அவற்றின் வால்களில் விளக்குக்கூண்டு களைக் கட்டி இரவிற் பறக்கவிடுவார். நாட்டுப்புறத்து மக்கள் இவற்றை வால்மீன்களென நினைத்து என்ன தீங்கு நேரிடுமோ என அஞ்சினர்.

நியூட்டன் தமது காலத்தைப் புதிய விளையாட்டுக் கருவி கள் அமைப்பதிலேயே செலவிட்டதால் பாடப்புத்தகங்களை ஊன்றிப்படிக்க நேரமில்லாது போயிற்று. இதனல் இவர் தமது வகுப்பில் கடைசி மாணவராகவே இருந்தார். ஒரு நாள் தமக்கு மேலுள்ள பையன் ஒருவன் தம்மைக் காலா லுதைக்கவே இவர் சிறிதும் பொறுக்கலாற்ருது அவனை மற்போருக்கு அழைத்தார். அங்ஙனமே இருவரும் சண்டை யிட்டதில் ஆண்டிற் குறைந்திருந்த நியூட்டனே வெற்றி பெற்ருர். இதற்குப்பின் இவர் படிப்பிலும் அப்பையனைத் தோற்கடிக்க உறுதி செய்துகொண்டு தம் விடா முயற்சியால் வெகு விரைவில் வகுப்பின் முதல் மாணுக்கராக விளங்கினர்.

சில ஆண்டுகள் கழிந்ததும் இவர்தம் அன்னையார் உதவிக்கு ஆள் இல்லாததால் இவரைப் பள்ளியிலிருந்து நிறுத்தியதுமன்றி வீட்டு அலுவல்களைப் பார்க்கும்படி ஏற் பாடுசெய்தார். இவருடைய அன்னை தானியம் முதலியவற்றை விற்பதற்கும், வீட்டிற்கு வேண்டிய சாமான்களை வாங்குவதற் கும் நியூட்டனை ஒரு வேலையாளுடன் சந்தைக்கு அனுப்புவது வழக்கம். நியூட்டன் அவ் அலுவல்களை வேலையாளிடமே ஒப்புவித்துவிட்டு வேலியோரங்களில் உட்கார்ந்து புத்தகங் களைப் படிப்பார். ஒருநாள் இவர் வேலியோரத்தில் அமர்ந்து ஒரு கணிதநூலை ஆராய்வதை இவருடைய மாமன் கண்டார். உடனே அவர் நியூட்டனுக்குக் கல்வியில் இருக்கும் ஆர்வத்தை அன்னையாரிடந் தெரிவித்து இவரை மீண்டும் கல்விச்சாலைக்கு அனுப்பும்படி வற்புறுத்தினர். அங்ஙனமே இவர் கிரந்தாம் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பப்பட்டார்.

இவருக்குச் சித்திரம் எழுதுவதில் மிகுந்த விருப்பம் உண்டு. இவர் எப்பொழுதும் அறிவியல் ஆராய்ச்சி செய்து கொண்டே இருப்பார். இவர் சிறு பிள்ளையாக இருக்கும் போதே உலோகங்களை எளிதில் உருக்கும் வழிகளையும், உடைந்துபோன கண்ணுடிகளை ஒட்டவைக்கும் தந்திரங்களை யும் கண்டுபிடித்தார். இவர் 1661-ஆம் ஆண்டில் டிரினிட்டி (Trinity) பல்கலைக் கழகத்தில் சேர்ந்தார். இவர் மிகவும்

ஏழ்மை நிலையில் இருந்ததால் கலாசாலையில் மாணவர்களுக்கு உணவு பரிமாறும் வேலையை ஏற்றுக்கொண்டார். இதனால் இவருக்கு உணவு இலவசமாகக் கிடைத்தது. இவர் மாணவராக இருக்கும்பொழுதே ஒலி அலைகளைப்பற்றி ஆராய்ச்சி செய்து வந்தார். இக்காலத்தில் இலண்டன் நகரில் ப்ளேக் (Plague) என்னும் கொள்ளை நோய் பரவத்தொடங்கினதால் நியூட்டன் வீடு திரும்ப நேரிட்டது.

இவர் 1664-ஆம் ஆண்டில் வான நூல் ஆராய்ச்சியில் தமது எண்ணத்தைச் செலுத்தினார். இவர் இரவில் நெடு நேரம் வரை வானத்தை நோக்கி ஆராய்வார். இவர் மிகவும் நுட்பமாக ஆராய்ந்து தாமே ஒரு தொலை நோக்காடி (Reflecting Telescope) செய்தார். இது கலீலியோவின் கண்ணாடியைவிட ஆற்றல் நிறைந்ததாக இருந்தது. நியூட்டன் இதன் உதவியால் வியாழ மண்டிலத்தைச் (Jupiter) சோதிக்கத் துவங்கினார்.

மரத்தில் பழங்கள் பழுத்தவுடன் அவை ஏன் நிலத்தில் வந்து விழவேண்டுமென்றும், அவை ஏன் வானத்தை நோக்கிக் கிளம்பக்கூடாது என்றும் சில ஐயங்கள் இவருக்குத் தோன்றின. இதைப்போலவே வானத்தில் ஒரு கல்லை விட்டு எறிந்தால் அது மேலும் மேலும் உயரத்திலேயே போய்க்கொண்டு இருக்காமல் மீண்டும் ஏன் நிலத்திலேயே வந்து விழுகின்றது என ஆராய்ந்தார். நிலமும் நாம்காணும் ஏனைய பொருள்களும் ஒன்றையொன்று தம்பால் இழுக்கின்றன வென்றும், நிலம் கல்லையும் பழங்களையும் ஏனைய பொருள்களையும்விடப் பன்மடங்கு பெரிதாகையால் அவற்றைத் தன்னிடம் இழுத்துக் கொள்கின்றது என்றும் இவர் கண்டுணர்ந்தார். திங்கள் (சந்திரன்) அதன் பாதையை விட்டு அகலாமல் இருப்பதும் நிலத்தின் கவர்ச்சியினால் (Gravitation) தான் என்று நியூட்டனுக்குப் புலப்பட்டது. திங்கள் ஏன் நிலத்தைச்சுற்றி வருகின்றது? இங்ஙனமே ஏனைய கோள்களும் நிலை பிறழாது ஒன்றையொன்று எதனால் வட்டமிடுகின்றன? அவைகள் ஏன் நேராக ஓடிப்போவதில்லை? ஒரு கல்லைக் கயிற்றினால் கட்டிச் சுழற்றுவதாக வைத்துக்கொள்வோம். கயிறு உறுதியாக இருக்கும்வரை கல் சுற்றிச் சுற்றி வட்டமிடுகின்றது கயிறு அறுந்தவுடன் கல் எங்கேயோ போய்விழுகின்றது. நியூட்டன் தாம் கண்டுபிடித்த வையகத்தின் கவர்ச்சியை மேலே கூறிய கயிற்றின் இழுக்கும் ஆற்றலுக்கு ஒப்பிடுகின்றார். இக் கவர்ச்சியின்றேல் திங்கள்(சந்திரன்) பூமியைச்சுற்றி வட்டமிடாமல் ஏனைய கோள்களோடு மோதிக்கொள்ளும்படி நேரிடும்.

இவையுமன்றி நியூட்டன் படைப்பின் மற்றொரு வியத்தகு தோற்றத்தையும் உலகிற்கு விளக்கிக்காட்டினார். இவர் கதிரவன் ஒளியை ஒரு சிறு வாயிலின் வழியாக இருட்டறையினுள் கொண்டுவந்து முப்பட்டைக் கண்ணாடி (Prism) ஒன்றின்மேல் பாயும்படி செய்தார். அக்கண்ணாடியை ஊடுருவிச் சென்ற வெண்மை ஒளி கண்ணாடியைவிட்டு அகன்றவுடன் வானவில்லைப்போன்று பல்வேறு நிறங்களுடன் எதிரிலுள்ள சுவரில் விழுந்தது. அதுவரை எவரும் அறியாத இந்நுட்பத்தை நியூட்டன் தமது ஆராய்ச்சினால் விளக்கிக்காட்டினார். கதிரவன் ஒளி வெண்மையாகத் தோன்றினாலும் உண்மையில் அது பலதிறப்பட்ட நிறங்களால் ஆக்கப்பட்டது என்றும் நிற ஒளிக்கதிர்கள் ஒவ்வொன்றும் வெவ்வேறு தன்மைகள் உடையன என்றும், அவற்றின் ஆற்றல்கள் ஒன்றிற்கொன்று மாறுபடுகின்றன என்றும் இவர் கண்டுபிடித்தார். நியூட்டன் விளக்கிக்காட்டிய இந்நிறக்கூட்டம் (Spectrum) ஒளி ஆராய்ச்சிக்கே அடிப்படையானது. நம் கண்ணுக்குப்புலப்படும் இச்சிறிய நிறக்கூட்டம் ஒரு பெரிய நிறக்கூட்டத்தின் சிறு பகுதியே என்பதும், அதன் இரண்டு முனைகளிலும் கண்ணுக்கு எட்டாத ஒளிக்கதிர்கள் இருக்கின்றன என்பதும், பிற்காலத்திய ஆராய்ச்சியாளர்களால் கண்டுபிடிக்கப் பெற்றன. நம் கண்ணுக்குத்தெரியும் நிறக்கூட்டம் சிவப்பு முதல் நீலம் வரை ஏழு நிறங்களால் ஆக்கப்பட்டிருக்கின்றது. சிவப்பு ஒளிக்குமேலும், நீல ஒளிக்குக்கீழும் ஆற்றல் மிகுந்த ஒளிக்கதிர்கள் இருக்கின்றன. (Infra red rays and ultra violet or x-rays) இவ் ஒளிக்கதிர்கள் கம்பியில்லாத்தந்தி முதலிய அரிய கருவிகளை இயக்குவதற்கும், பனியால் மூடப்பெற்ற இடங்களைப் படம் பிடிப்பதற்கும், பல்வேறு நோய்களைப் போக்குவதற்கும் உடம்பிற்குள் முறிந்துபோன எலும்புகளைப் படம் பிடித்து ஒட்டவைப்பதற்கும் உதவுகின்றன. இவ் ஒளிக்கதிர்கள் கல், மரம், சதை ஆகிய எல்லா திணிப்பொருள்களையும் தங்குதடையின்றி ஊடுருவிச் செல்கின்றன. ஒளிக்கதிர்களின் அரிய தன்மைகளைக் கண்டுபிடிப்பதற்கு நியூட்டனுடைய நிறக்கூட்டமே வழிகாட்டியாக இருந்தது.

1668-ஆம் ஆண்டில் நியூட்டன் எம். ஏ. பட்டம் பெற்றார். கேம்பிரிட்ஜ் (Cambridge) பல்கலைக்கழகத்தில் இவர் ஓர் உறுப்பினராகத் தெரிந்தெடுக்கப்பெற்றார். அடுத்த ஆண்டில் டாக்டர் பேரோ (Dr. Barrow) என்பவரின் உதவியால் இவர் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தின் கணிதநூற் பேராசிரியராக அமர்ந்தார். 1672-ஆம் ஆண்டில் இவர் அரசர் கழகத்தின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார். இவர்

தன்மைகளைப்பற்றியும், வானத்தின் நிறத்தைப்பற்றியும், ஒலி அலைகளின் போக்கைப்பற்றியும், கடல் அலைகளின் உற்பத்தியைப்பற்றியும், விண்மீன்களின் தோற்றங்களைப்பற்றியும் ஆராய்ச்சிசெய்து வந்தார். இவர் நெடுநாட்களாய் ஆராய்ந்து அறிந்த உண்மைகளை பிரின்ஸிப்பியா (Principia) என்னும் நூலில் வெளியிட்டார். 1688-ஆம் ஆண்டில் பாராளுமன்றத்தில் (Parliament) இவர் ஓர் உறுப்பினராக அமையப்பெற்றார்.

இவர் தமது வாழ்நாள் முழுவதையும் அறிவியல் ஆராய்ச்சியிலேயே கழிப்பதென உறுதிசெய்துகொண்டார். இவர் கண்களின் அமைப்பைப்பற்றியும் அவற்றில் ஒளிமாறுபடும் தன்மைகளைப்பற்றியும் ஆராய்ச்சி செய்தார். உலோகங்களின் உருகும் தன்மையைப்பற்றியும் இவர் ஆராய்ந்தார். நியூட்டன் தாம் கண்டறிந்த உண்மைகளை, அவ்வப்போது தமது கைப்பட எழுதிவைத்து அவற்றை அச்சிட எண்ணி இருந்தார். ஒருநாள் நியூட்டன் இல்லாத வேளையில், இவரது நாய் எரியும் மெழுகுவத்தியை அத்தாள்களின் மேல் இடறித் தள்ளி விட்டது. இதனால் அவற்றிற் பெரும்பகுதி தீக்கிரையாயிற்று. நியூட்டன் வீட்டிற்குத் திரும்பி வந்ததும் நடந்ததைக் கண்டு ஆறாத் துயருற்றார். ஆயினும் இவர் எல்லா உயிர்களிடத்திலும் மிகுந்த அன்புடையவராகலின் நாய்க்கு ஒரு தீங்கும் செய்யக் கருதினாரில்லை. இவர் பொறுமையுடன் பல ஆய்வுகளை மீண்டும் செய்து பார்த்துப் பன்னிரண்டு ஆண்டுகளுக்குப்பின் அந்நூலை அச்சிட்டு வெளியிட்டார். இவர் மிகவும் வருந்தி உழைத்து வந்தமையால் இவரது உடல் நலம் குன்றியது.

1695-ஆம் ஆண்டில் நியூட்டனுக்கு நாணயச்சாலையின் மேற்பார்வையாளர் (Warden of the Mint) வேலை கிடைத்தது. இவ்வேலையில் நியூட்டன் ஆண்டு ஒன்றுக்கு ஐந்நூறு பவுன் சம்பளம் பெற்று வந்தார். இவர் நான்கு ஆண்டுகளுக்குள் ஆயிரத்து ஐந்நூறுபவுன் சம்பளத்தில் நாணயச்சாலைத் தலைவராக அமர்த்தப்பெற்றார். அக்காலத்தில் ஆங்கிலநாட்டில் கள்ள நாணயங்கள் மிகுதியாய் வழங்கி வந்தன. நியூட்டனின் முயற்சியால் இதை ஒடுக்குவதற்குச் சட்டம் ஏற்படுத்தப்பட்டது. நாணயங்களும் அரசாங்கத்தாரால் புதிய முறையில் செய்யப்பட்டன. நியூட்டன் நாணயத்தாள்களுக்கு (Currency notes) நீர்க்குறி (Water mark) இடுவதையும், உலோகங்களை எளிதில் உருக்கும் நுட்பங்களையும் கண்டுபிடித்தார்.

இவர் ஆராய்ச்சியில் ஈடுபடும்போது பல எண்ணங்களில் ஆழ்ந்திருப்பார்; ஆகலின் சில வேளைகளில் தம்மையே மறந்து

விடுவார். ஒருநாள் நியூட்டன் தமது குதிரையின் கடிவாளத்தைப் பற்றிக்கொண்டு ஒரு குன்றின்மேல் ஏறிப்போய்க் கொண்டிருந்தார். இவர் பல நினைவுகளில் ஆழ்ந்திருக்கும் பொழுது குதிரை நழுவிப்போய்விட்டது. இவர் குதிரை போனதும் தெரியாமல் நெடுந்தொலைவரை கடிவாளத்தை மட்டிலும் கையிற் பிடித்துக்கொண்டே நடந்து சென்றார். முடிவில் குதிரைமேல் ஏறிச்செல்லலாமென எண்ணிப் பார்த்த போதுதான் அது நழுவிப்போனதை உணர்ந்தார். மற்றொருநாள் இவர் முட்டை சமைக்கத் தொடங்கியபொழுது தமது கருத்து வேறொன்றைப்பற்றி யிருந்தமையால் முட்டைக்குப் பதிலாகத் தமது சிறிய கடிகாரத்தை உலையிலிட்டன ரென்று கூறப்படுகின்றது. இவர் பல இரவுகளில் படுக்கை யிலேயே உட்கார்ந்து உறக்கமின்றிப் பல்வேறு எண்ணங் களில் ஆழ்ந்திருப்பார்.

இவர் 1699-ஆம் ஆண்டில் ஆங்கிலப் பஞ்சாங்கத்தைத் திருத்தியமைத்தார். அடுத்த ஆண்டில் இவர் மாலுமி களுக்கு இன்றியமையாததான (Sextant) அளவைக்கருவி ஒன்றைக் கண்டுபிடித்தார். 1703-ஆம் ஆண்டில் அரசர் கழகத் தின் தலைவர் ஆனார். அரசாங்கமும் இவருக்குச் சிறந்த பட்டங்களை வழங்கிற்று. நியூட்டனுக்குப் பெருஞ் செல்வம் பெருகிற்று. இவர் தமது செல்வமனைத்தையும் பிறருக்கு நன்மை செய்வதிலேயே செலவிட்டார். நியூட்டன் இறைவ னிடத்து இடையறாத அன்பு பூண்டு ஒழுகிவந்தார். இவர் இயற்றிய நூல்களில் இறைவன்றன் முழுமுதற்றன்மையையும், அளவிலாற்றலையும் வற்புறுத்திக் கூறி இருக்கின்றார். இவர் உலகிற்காணும் விந்தைகள் அனைத்தும் எம்பெருமானது "அலகிலாவிளையாட்டே" ஆகும் என்னும் முழுநம்பிக்கை கொண்டவர். நியூட்டன் இளகிய மனமும் மிகுந்த பணிவும் உடையவர். இவர் "கற்றது கைம்மண்ணளவு கல்லாதது உலகளவு" என்னும் உண்மையைத் தமக்குத்தாமே அடிக்கடி நினைவூட்டிக்கொள்வார். இவர் ஆண்டு முதிர்ந்த பின்னரும் அரசர் கழகத்திற்குச் சென்று ஆங்கு நடக்கும் அறிவியல் ஆராய்ச்சிகளிற் கலந்து கொள்வார்.

நியூட்டன் 1727-ஆம்ஆண்டு தமது 85 ஆவது அகவையில் இறைவனடி சேர்ந்தார். இவரது உடல் அரசகுடும்பத்தினர்க் கும் ஏனைய பெருமக்களுக்கும் உரிய வெஸ்ட்மினிஸ்ட்டர் சமாதியில் (West-minister Abbey) அடக்கம்செய்யப்பட்டது.

"வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம், உள்ளத் தனைய துயர்வு"

# செய்திகளும் குறிப்புகளும்:
# News and Notes

[புதுக்கவி]

## தமிழர் சிறப்பு

[கொடுமுடி வித்துவான் திரு. பெ. கோவிந்தன் அவர்கள்]

மெல்லியல் மகளிர் மேற்கணை யெறிந்து
வீழ்த்தலும் வில்லெடாப் பகையைக்
கொல்லுவா னெளிந்து வில்லினு லெறிந்து
கொல்லலும் ஆரியர் வீரம்;
எல்லவை மகளி ராக்களைப் போக்கி
எதிர்வரும் பகைஞரோ டெதிர்ந்து
வில்லில தாயின் வில்லையுங் கொடுத்து
வெல்லுதல் தமிழர்தம் வீரம். 1

பிறப்பினு லுயர்வு தாழ்வெனக் கூறிப்
பிறப்பித்த கடவுளைத் தொழவும்
அறத்தொடு செலவும் வேற்றுமை காட்டி
அலைவதே ஆரிய ரொழுக்கம்;
சிறப்புறு மொழுக்க அறிவினு லுயர்வு
தெரிவித்திங் கியாவர்க்கு மொப்ப
அறத்தொடு மொழுகி அறிவினை வணங்கி
அமைவதே தமிழர்த மொழுக்கம். 2

மெய்யினை வருத்துங் கைத்தொழி லின்றி
வெறுப்புறு மிரப்பினு லேய்ப்பால்
பொய்யினுற் பிறர்பாற் புகுந்திரந் துண்டு
பொலிவதே ஆரியர் வாழ்க்கை;
செய்தொழில் வருந்திச் செய்துபொன் னீட்டித்
தெரிந்ததஞ் சுற்றமுண் பித்து
வையகர்க் குதவி தாங்களு முண்டு
வாழ்வதே தமிழர்தம் வாழ்க்கை. 3

பொன்வரை வேண்டும் பொருளெலாம் பிறர்பால்
புகுந்திரந் தேற்பதே யன்றிக்
கன்மனங் கொண்டு நீருமே யீயாக்
கயமையே ஆரிய ரியல்பு;
துன்புறு முயிர்க்கு மெழுகென வுருகித்
துன்னுகை மாறெதிர் நோக்கா
தென்னையுங் கொடுத்துத் துன்பினைக் கெடுக்கு
மிரக்கமே தமிழர்த மியல்பு. 4

தம்மையே புகழ்ந்து பிறர்தமை யிகழ்ந்து
சார்பயனுண் டெனிற் சார்ந்து
வெம்மன வரைவின் மகளிரே போல
விலகுவ தாரியர் கேண்மை;
இம்மையி னன்மை தீமைவந் தணையின்
இரண்டையு முடனிருந் துண்டு
செம்மைசேர் நெஞ்சக் குலமகள் போலத்
திகழ்வது தமிழர்தங் கேண்மை. 5

முனிவராய்க் காம முதல்வரா தலும்பொய்
மொழிவதிற் பெரியரா குதலும்
மனிதருக் கரசாய்க் கொலைபுரி குதலும்
வடபுலத் தாரியர் பெருமை;
கனியிதழ் வெண்பற் பிறர்மனை நயக்குங்
காமம்பொய் கொலைகளைக் கடிந்து
மனவினை யடக்கிமெய்ப் பொருள் காணும்
மாட்சிமை தமிழர்தம் பெருமை. 6

எள்ளுறு மணங்க ளெழுவகை யானும்
எழில்பெறு கணவரைக் கொளலும்
உள்ளுதெய் வத்தால் முனிவராற் கருக்கொண்
டுயிர்த்தலும் ஆரியர் கற்பு
புள்ளுறு பொழிலிற் காதனெஞ் சத்தாற்
பொருந்தலுங் கணவரை யன்றி
உள்ளமுந் தெய்வ முள்ளுத லொழிய
ஒழுகலுந் தமிழர்தங் கற்பு. 7

தக்கவை செய்யா தல்லவை செய்து
    தாய்வழிப் பிறந்துபின் செத்த
மக்கள்பல் பேரைக் கடவுளென் றேத்தி
    வணங்குவ தாரியர் சமயம்;
முக்கரு விக்கும் மூவுல குக்கும்
    மூன்றுகா லக்குமப் பாலாய்ப்
புக்கவை யாகிப் பிறப்புறுப் பொருளைப்
    போற்றுதல் தமிழர்தஞ் சமயம். 8

இயல்வரம் பின்றி யினிமையொன் றின்றி
    எடுத்தலும் படுத்தலு மிகுந்து
கயவரைப் போன்று கருத்துக ளமைந்து
    கழிந்ததா லாரியர் வடசொல்;
நயம்பல பொருந்தி யியல்வரம் புற்று
    நல்லர சறிவரைப் போன்று
மயலறுந் துயர்ந்த கருத்துக ளமைந்து
    வாழ்வுறும் தமிழர்தம் தென்சொல். 9

வகுப்புக ளமைத்துப் பார்ப்பன ரன்றி
    மற்றையார் கற்பதை விலக்கும்
நகைப்புறும் வேள்வி யியற்றியூ னுண்ண
    நவின்றிடும் ஆரியர் வேதம்;
பகுத்துணர் மக்கள் யாவருங் கேளிர்
    படிக்களல் லோர்களும் உயிரைச்
செகுத்தலும் உணலும் தீமையா மென்று
    செப்பிடுந் தமிழர்தம் வேதம். 10

---

## குலசேகரன்பட்டினத்தில் ஒரு பெரியாரின் சமாதி

### ('சாம்பிராணிச்சாமி' என்ற யாழ்ப்பாணம் பொன்னம்பலசாமி)

இப்பெரியார் இளம் வயதிலேயே திருவாவடுதுறை சென்று சந்நியாசம் பெற்று இவ்வூருக்குத் தமது 19-ம் வயதில் வந்தார்கள். சைவ நன்மக்களின் போற்றுதலால் (61) அறுபத்தொரு ஆண்டுகள் இவ்வூரிலிருந்து. சிவப்பணி புரிந்து, 5-3-'37 வெள்ளிக்கிழமை மாலை (தமது 80-ம் வயதில்) சிவயோகத் தமர்ந்தார்கள்.

ஊரிலுள்ள சைவப்பிள்ளைமார், சைவமங்கையர், பாலர்கள் அனைவரும் பெருந்திரளாகக் கூடிவந்து மந்திர நீராட்டம் செய்வித்து, தூபதீப அர்ச்சனை முதலிய முறையால் ஆற்றுவித்துச் சில ஒலி முழக்கத்துடன் கோலாகலத்தோடு திருமந்திர நூலில் அருளியிருக்கும் முறைப்படி, திருச்செந்தூர் உண்டியல்சாமி அவர்களின் துணைகொண்டு சிவயோக சமாதியில் அமரச்செய்தது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

'சந்தியாவந்தன இரகசியம்' முதலிய பயன்கொள் நூல்கள் இயற்றிய, யாழ்ப்பாணம் வித்வான் சி. தாமோதரம் பிள்ளையவர்களின் தமையனார் தாம், இந்தச் 'சாம்பிராணிச்சாமி' என்பவர்கள். இவர்கள் நால்வகைத்தொண்டும் நயமுடன் ஆற்றிவந்தார்கள். திருநந்தவனம் வைத்து பூமாலை புனைந்தேத்தலும், சிவபூசை யேற்று முறைவழாது புரிதலும், யோகநூல் முறையின் நிட்டைகள் கூடலும், ஞான நூல் சாத்திரம் பழுதற ஓதலும் ஆகிய தொண்டுகள் அமைவுறச் செய்து வந்தார்கள்.

'சைவ வினாவிடை', 'சைவ பாலபாடம்' முதலிய பள்ளிக்கூட மாணவர்களுக்குக் கைம்மாறு கருதாது ஓதுவித்து வந்தார்கள். காமம், வெகுளி, மயக்கம் மூன்றும் கடிந்து நல்வாழ்வில் வாழ்ந்து வந்தார்கள் என்றும் சிவனடி மறவாத் தொண்டு ஆற்றி வந்தார்கள். படுக்கையிலுற்றுச் சமாதியாம் வரையும், ஞான நூல்களையும், சித்தாந்த சாத்திரம் பயன் இயல்களையும் ஓதிக்கொண்டிருந்த அருஞ்செயலே, அவர்களின் இடையறுத்தொண்டின் உறுதிப்பாட்டிற்குப் போதிய சான்றாகும்.

சமாதி விழாமுடிய இரவு மணி 12 ஆயிற்று. அம்முடிவு வரை சைவ மங்கையர், மாந்தர், பிள்ளைகள் சுமார் 500 வரை சிவநாம முழக்கத்தோடு இருந்து பணியாற்றிய தன்மை எவ்வெவர் மனத்தையும் சிவத்தொண்டில் ஈடுபடச்செய்தது.

ஓம்
தமிழ்த் தெய்வம் துணை.

# செந்தமிழ் மா நாடு.

"கண்ணுதற் பெருங் கடவுளுங் கழகமோடமர்ந்து
பண்ணுறத் தெரிந்தாய்ந்த இப்பசுந் தமிழேனை
மண்ணிடைச்சில இலக்கண வரம்பிலா மொழிப்போல்
எண்ணிடைப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ"

நற்றமிழ் அன்பர்களே!

இப்போது தமிழ ரல்லாத ஏனைய நம் நாவலந்தீவு (இந்தியா) நாட்டிலுள்ள பற்பல பகுதியினரான பற்பலமொழி பேசுவோருந் தத்தம் மொழிகட்கு ஆக்கந் தேடி விட்ட-தேடுகின்ற, உண்மையைப் பலரும் நன்கு அறிந்ததே.

உலகம் போற்றும் உயரிய நாகரிக வாழ்க்கையிற் சிறந்த பழைமையானவர்களான நந்தமிழ் மக்கள் தஞ் சீரிய நாகரிக வாழ்க்கைக்கு உறுபெருந் துணைக் கருவியாகவுள்ள தாய் மொழியாந் 'தண்டமிழை'ப் போற்றி, அதனைக் கட்டாயக் கல்வி யாக்கும் முறையை இதுகாறும் மேற்கொள்ளா திருப்பது நனியும் வருந்தத் தக்கதே.

இப்போது தமிழ் நாட்டில் வீறு கொண்டு இயங்கிக் கொண்டிருக்கும் 'இந்தி மொழிக்' கட்டாயக் கல்வி முறையின் விடாமுயற்சி உழைப்பைக் கண்டாயினும் நந் தமிழறிஞரும், தமிழ்மக்களும் நம் உயிரினுஞ் சிறந்த 'இன்றமிழ்'க்கான ஆக்க நிலை பேறுகளைக் கோலா திருப்பது இன்னும் பன்முறை சாலவும் வருந்தத் தக்கதாகவே இருக்கின்றது.

எனவே, இப்பழம் பதியாகிய 'கருவூரில் செந்தமிழ் மா நாடு' என்ற ஓர் மா நாட்டைத் திருவுடைத் தமிழன்பர்களின் துணைக் கொண்டு கூட்டவும், அக்குழூஉவில் தமிழறிஞர் பலரை வரவேற்றுச் செந்தமிழ் மொழியின் பெருமையைப் பற்றியும், அதனைக் கட்டாயக் கல்வி யாக்கும் இன்றியமையாமையைப் பற்றியும், விரிவுரைகள் நிகழ்த்தச் செய்யவும், அம் மாநாட்டின் சார்பாகப் பொறுப்புள்ள பல தமிழ்ப் பெரியார்களின் கையெழுத்திடப் பட்ட ஓர் கட்டாயக் கல்வித் தீர்மானத்தை நிறைவேற்றவும், அதனை மாகாண அரசியற் றலைவர்க்கும், கல்வித்துறைத் தலைவர்கட்கும் அனுப்பவும் முடிவு செய்யப் பட்டிருப்பதால், இவ் விண்ணப்பத் தாளைக் கண்ணு

றும் தமிழன்பர்கள் எல்லாரும் உளமுவந்து தத்தம்மா லியன்ற பொருளுதவியை விரைந்து செய்து, இம் மாநாட்டை மிக அண்மையில் கூட்டுதற்குரிய வசதிகளைப் புரிந்தும் இந் நற் பெரும் பணியை இனிது முடித்துத் தர வேணுமாக நனியும் பணிவுடன் கேட்டுக் கொள்ளுகின்றோம்.

இங்ஙனம்,
ஈழத்துச் சிவானந்த அடிகள்.

வித்வான். வை. பொன்னம்பலனார்,
தமிழாசிரியர், வேலூர்—சேலம்.

குறிப்பு:—இம் மாநாட்டைக் கூட்டும் நாள், விரிவுரையாற்று வோரின் பெயர்கள் முதலியன விரைவில் வெளியிடப் படும்.

பொருள் உதவி புரியும் அன்பர்கள் கீழ்க்குறிக்கும் முகவரிக்கு (விலாசம்) அனுப்பவும். 'முனிவரும் மன்னரும் உன்னுவ பொன்னால் முடியும்' மணிமொழி.

10—4—37 } ஈழத்துச் சிவானந்த அடிகள்,
கருவூர் } அறிவுதயக் கழகம், வஞ்சியம்மன் கோயிற் றெரு, கருவூர்,

---

## வயலூர் முருகப்பெருமான் கோவில் குடமுழுக்கு (கும்பாபிடேகம்)

திருச்சியிலிருந்து நான்கு மைலுக்கப்பாலுள்ள வயலூரில் அருணகிரிநாதரால் திருப்புகழ்ப் பாடல்பெற்ற முருகப்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கோயில் கோபுரம் ஒன்று புதிதாய் எழுப்பித் திருக்கிறது.

உட்புறம் முருகப்பெருமான் திருமுன் அருணகிரிநாதருக்கு ஒரு மண்டபம் அமைத்து, அதில் அவர்தம் உருவச்சிலை வைக்கப்பெறுகின்றது. இப்பெருஞ்செயல் சென்னைத் திருப்புகழாமிர்த ஆசிரியரும், பெருஞ்சொற் பொழிவாளருமாகிய உயர்திரு கிருபானந்தவாரி அவர்கள் நன்முயற்சியால் நடைபெறுகின்றது.

18-6-37-ஆனி 5உ வெள்ளிக்கிழமை குடமுழுக்கு (கும்பாபிடேகம்) மிகவுஞ் சிறப்பாக நடைபெறும். அவ்வமைக்கு முருகனடியவர்கள் வேண்டும் பொருளுதவி புரிவதோடு நேரில் விழாவினைக் கண்டு முருகப்பேற்றைப் பெற் றின்புறுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

## திருவள்ளுவர் திருநாள்

25-5'-37 செவ்வாய்க்கிழமை யன்று திருவள்ளுவர் திருநாள் வருகின்றது. சென்ற ஆண்டைப்போல இவ்வாண்டிலும் எல்லா ஊர் மக்களும் ஆங்காங்கே விழாவினைச் சிறப்பாக நடத்துவார்களாக.

Reg. No. M. 1725 April - May 195



---

Printed by Mr. A. Rangaswamy, at the The Progressive Printers, Coral Merchant Street, Madras. and Published by Mr. V. Subbiah for The S. I. S. S. W. P. Society, Tinnevelly,